உ

முருகா

# செந்தமிழ் இன்பம்

( 22 கட்டுரைகள் )



ஆசிரியர் :

**கிருபானந்தவாரி**



திருப்புகழமிர்தம் காரியாலயம்,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

1965

# முன்னுரை

உலகிலுள்ள மக்கள் உடம்பையும், உணர்வையும், உயிரையும், வளர்த்துக்கொள்ள வேண்டும். உடம்பை உணவினலும், உணர்வைக் கலைகளாலும், உயிரைக் கடவுள் நினைவாலும் வளர்க்கவேண்டும். கலைகள் மொழிகளால் சிறப்படைகின்றன. மொழிகளுள் முதன்மைபெற்றது தமிழ். 'மூந்து தமிழ்' என்கின்ருர் அருணகிரிநாதர்.

இத்தகைய தமிழ் நமது உணர்வைச் செம்மைப் படுத்துகின்றது. அதனல் செந்தமிழ் எனப் பெற்றது. இவ்வாறு செம்மை என்ற அடை கொடுத்து தமிழையன்றி வேறு எம்மொழியையும் கூறுவதில்லை.

செந்தமிழ் இன்பம் என்ற தலைப்பின்கீழ் சில கட்டுரைகள் எழுதப்பட்டு மலேயாவில் வெளிவரும் "தமிழ் நேசன்" என்ற சிறந்த நாள் வெளியீட்டில், ஞாயிறு தோறும் வெளிவந்தது. அன்பர்களின் நலங் கருதி அவைகளைத் தொகுத்து இப்போது வெளியிடுகின்றேன்.

அன்பர்கள் இதனைப் படித்து உணர்வு நலம் பெறுக. திருவேலிறைவன் திருவருள் துணைபுரிக.



அன்பன்,

கிருபானந்தவாரி.

# பொருளடக்கம்

முருகா

# செந்தமிழ் இன்பம்

## 1. என்ன நியாயம்

[நியாயம் அநியாயம் என்பது செயலில் மட்டும் அமைவதில்லை; செயலின் கருத்தை வைத்தே தீர்மானிக்க வேண்டும். தனக்கென்று யாசிப்பது இகழ்; அறப்பணிக்கென்று யாசிப்பது புகழ். செயல் ஒன்றுதான்; கருத்து வேறுபாடுடையது. சிவபெருமான், கல்லாலும், வில்லாலும், பிரம்பாலும் அடித்தோரைக் காத்தருளினர். ஆனல் மாமலர் தூவிய மன்மதனை எம்பெருமான் எரித்ததேன்? இதை அழகுற விளக்குகிறது இச் செந்தமிழ்க் கட்டுரை.]

நல்லது தீயது என்பதைச் செயலை மட்டும் வைத்துப் பார்த்து முடிவுகட்டக் கூடாது. இது நியாயம், இது அநியாயம் என்பது செயலில் மட்டும் அமைவதில்லை. என்ன கருத்திலே செய்யப்பட்டது என்பதை வைத்தே தீர்மானிக்க வேண்டும்.

ஒருவனிடத்திலேயுள்ள பொருளைக் கவரும் பொருட்டு ஒருவன் மற்றொருவனைக் கொலைபுரிந்தான். கொலை புரிந்த அவனுக்கு கொலைக் குற்றத்தைச் சாட்டி நீதிபதி மரண தண்டனை விதிக்கிருர். ஆனல் நீதிபதியைக் கொலைபாதகன் என்று உலகம் நிந்திப்பதில்லை. அவர் செய்த கொலைக்காக அவரைக் கொல்லுவதும் கிடையாது. என்ன காரணம்?

பொருளைக் கவர வேண்டி அவன் கொன்றான்.

அவனுடைய கருத்து பணத்தை நாடியது. நீதிபதி கொலையாளிக்கு மரண தண்டனை விதிப்பது அத்தகைய குற்றம் உலகில் நிகழாது இருக்கும் பொருட்டும், பலரைக் காத்தல் பொருட்டும் ஆகும். நீதிபதி உள்ளம் உலக உபகாரத்தை நாடியது. ஆகவே இரண்டும் கொலைபோன்ற வகையில் ஒன்று போல் தோன்றினாலும், நெருப்புக்கும் பனிக்கட்டிக்கும்போல் மிகப் பெரிய வேற்றுமை உண்டு.

"கொலையில் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனோடு நேர்"

### செயலும் கருத்தும்

ஒருவன் தன் வயிற்றை வளர்க்கும்பொருட்டு கை நீட்டி வாங்குவானானால் பிச்சை எடுக்கின்றான் என்று உலகம் நிந்திக்கும். ஏற்பது இகழ்ச்சி என்று நீதி நூல் புகலும். மற்றொருவன் ஒரு பள்ளிக்கூடம், மருத்துவச்சாலை, திருக்கோயில் முதலிய நற்பணிகளைச் செய்யும்பொருட்டு கைநீட்டி வாங்குவானானால் உயர்பணி புரிகின்றான் என்று உலகம் வந்திக்கும். இரண்டும் யாசகமானாலும் தனக்கென்று யாசிப்பது இகழ்; அறப்பணிக்கு என்று யாசிப்பது புகழ். செயல் ஒன்றாய் இருப்பினும் கருத்தால் அஜகஜம் போன்ற வேற்றுமை உண்டாகின்றது.

### பூவால் வணங்கல்

இனி புண்ணியமான செயல்கள் பல; அவற்றுள் தலையாயது மலரிட்டு இறைவனை வணங்குவது.

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு"
என்றார் திருமூலர்.

"பூநாளும் தலைசுமப்ப"

"ஏடுடைய மலரால் முனை நாள் பணிந்தேத்த அருள் செய்த பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம் மான்" என்கிறார் திருஞானசம்பந்தர்.

"பூக்கை கொண்டரன் பொன்னடி போற்றிலார்"

"கைகாள் கூப்பித் தொழீர்
கடிமாமலர் தூவிநின்று"

"சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே"

என்றார் திருநாவுக்கரசர்.

"பூமாலை புனைந்து ஏத்தேன்"

"பெய்கழற்கீழ் விரையார்ந்த மலர் தூவேன்"

என்கிறார் மாணிக்கவாசகர்.

"மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து பணியேனே"

என்றார் அருணகிரிநாதர்.

"அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினுல் உருகி"

என்கிறார் தாயுமானுர்.

எனவே ஆன்றோர்கள் அனைவரும் இறைவனை மலரிட்டு வணங்குதலே சாலவும் சிறந்த நெறி என்கிறார்கள்.

### இது நியாயமா?

ஆனால் மலர் தூவிய ஒருவனைச் சிவபெருமான் எரித்துவிட்டார்; யாரை? மன்மதனை. மன்மதனுக்கு வில்லும் மலர்; கணையும் மலர். பூ வில் வளைத்து மலர்க்கணை சொரிந்தான். மலர் சொரிந்த மன்மதனை எம்பெருமான் நெருப்புக் கண்ணைத் திறந்து எரித்து விட்டார். இது என்ன நியாயம்?

ஒரு புலவர் பாடுகின்றார்;

'சிவபெருமானே! அம்பலத்தில் ஆடும் அண்ணலே! கல்லால் எறிந்த சாக்கிய நாயனாரையும், வில்லால் அடித்த விஜயனையும், பிரம்பால் அடித்த அரிமர்த்தன பாண்டியனையுங் காத்தருள் புரிந்தீர். உம்மை ஒன்றும் இகழாமல் மலர்களைச் சொரிந்த மன்மதனை எரித்துப் பொடி செய்தீரே! இது நியாயமா?' என்று கேட்கிறார்.

> செல்லாரும் பொழில் புடைசூழ் புலியூரம்
> பலவாண தேவா வும்மைக்
> கல்லாலும் வில்லாலும் செருப்பாலும்
> பிரம்பாலும் கடிந்து சாடும்
> எல்லாரும் நல்லவரென் றெண்ணியருள் ஈந்ததென்ன?
> இகழ்ச்சி யொன்றும்
> சொல்லாமல் மலரால்விட் டெறிந்தவனைக்
> காய்ந்த தென்ன சொல்லுவீரே!

### செயலின் தன்மை

கல்லை எறிந்த சாக்கியரும், செருப்பால் உதைத்த கண்ணப்பரும், இறைவன்மீது கரைகடந்த காதல்

புரிந்தார்கள். செயல் தீயதாயினும் உள்ளம் உயர்ந்த நிலையில் இருந்தது. மன்மதன் மலர் சொரிந்த செயல் உயர்வாக இருந்தாலும், அவன் மனம் இறைவனை மயக்கஞ் செய்ய வேண்டும் என்று நாடியது. ஆகவே செயல் உயர்வு; கருத்து கொடியது. ஆகவே கொடிய செயல் புரிந்தார்க்கு அனுக்கிரகமும், நல்ல செயல் புரிந்தார்க்கு நிக்கிரகமும் கிடைத்தன.

உள்ளமே முடிவு

ஒரு வஞ்சகன் ஒருவனை ஏமாற்றும் பொருட்டு இனிது கும்பிடுகிறான். மருத்துவர் நோயாளியை அறுக்கின்றார். இதில் எது நல்லது? எது தீயது? என்று சிந்தியுங்கள்.

ஆகவே செயலைக் கண்டு முடிவு கட்டக்கூடாது. செயல் செய்பவன் உள்ளத்தைக் கண்டு முடிவு செய்யவேண்டும்.

இதனையே மற்றொரு புலவர் பாடுகின்றார்.

நல்லானை இடமருவும் தியாகையா!
உம்மிடத்தில் நியாயங் காணேம்;
கல்லாலே எறிந்தோர்க்கும் செருப்படியால்
உதைத்தோர்க்கும் கடிந்துபோரில்
வில்லாலே அடித்தோர்க்கும் கொடுத்தீரே
யல்லாமல் விழிநீர் சோர
எல்லாம்உஞ் செயலென்றே இருப்போர்க்கு
யாதொன்றும் ஈகிலீரே.

———

## 2. சிலப்பதிகாரம்

### இன்பக் காவியம்

சிலப்பதிகாரம் என்பது சிலம்பினுல் விளைந்த வரலாறு; இது பஞ்ச காவியத்துள் ஒன்று. கண்ணகியைக் கதாநாயகியாக வைத்து, புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்ற மூன்று பிரிவுகளாக அமைத்து சிறந்தகாவியமாக இளங்கோ அடிகள் பாடியருளினுர்; இவர் சேரநாட்டு மன்னர். இளமையிலேயே துறவு பூண்டவர்.

'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்' என்று மகாகவி பாரதியார் பாடி யிருக்கின்றார். இனிய செந்தமிழ் இன்பம் நிறைந்த அரிய பெரிய காவியம் இது.

### கோவலன் முற்பிறப்பு

ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்ற பெரிய உண்மையை உணர்த்துகின்றது இக் காவியம்.

கலிங்கநாடு என்ற சிறந்த நாட்டின் தலை நகரங்கள் இரண்டு; சிங்கபுரம், கபிலபுரம் என்பன. இந்த நகரங்களில் பங்காளிகளான இரு அரசர்கள் அரசு புரிந்தார்கள்.

இவர்களுக்குள் ஒற்றுமைக் குறைவு இருந்தது. அதனுல் சிங்கபுரத்திற்குமகபிலபுரத்திற்கும் ஆட்கள் போய் வருவதில் கட்டுப்பாடு இருந்தது. கபிலபுரத்திலிருந்து சங்கமன் என்ற ஒரு பொன்னகை வியாபாரி சிங்கபுரம் வந்து நகை வாணிபம் புரிந்தான். அவனது பகைவனுகிய பரதன் அரசனிடம் போய்

சங்கமன் பகையரசனுடைய ஒற்றன் என்று பொய்மையாகப் புகன்றான்; சிங்கபுர மன்னன் சினமுற்று, சங்கமனைக் கொன்றுவிட்டான்.

சங்கமனுடைய மனைவி மிகுந்த கற்புடையவள்; அவள் பெயர் நீலி; அவள் அருந்துயரமுற்றாள். பதினான்கு நாட்கள் நிலை குலைந்து அலைந்தாள். மலைமீது ஏறி நின்று, என் கணவனுக்கு இந்த இடர் புரிந்தோர், 'மறுபிறப்பில் இத்துன்பமுற்று மாள்க' என்று கூறி வீழ்ந்து இறந்தாள்.

சங்கமனைக் கொல்வித்த பரதன் கோவலனாகப் பிறந்தான்.

> 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
> பிற்பகல் தாமே வரும்'

என்ற திருவள்ளுவரின் திருவாக்கின்படி, முன் செய் தீவினையால் கோவலன் கொலையுண்டு மாண்டான்.

## கண்ணகி வரலாறு

இனி கண்ணகி தேவியின் வரலாற்றுச் சுருக்கத்தைக் காண்போம்.

காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குலத்தில் பிறந்தவள் கண்ணகி; பத்தினிக்கடவுள், வீரபத்தினி, மங்கல மடந்தை, தரும பத்தினி என்ற பரியாய நாமங்களைப் படைத்தவள். மாநாய்கன் புதல்வி.

இவள் மாசாத்துவான் புதல்வன் கோவலன் என்ற பெருஞ் செல்வனை மணந்தாள். கோவலன்,

மாதவி என்ற கணிகையின் நட்பினுல், பொருள் முழுவதும் இழந்தனன். இந்திர விழாவின்போது, மாதவி பாடிய கானல்வரியால் மனம் மாறுபட்டு அவளை விடுத்துக் கண்ணகிபால் வந்தான்.

வறுமையுடன் வந்த கணவனைக் கண்ணகி வணங்கி இன்சொல் காட்டி வரவேற்ருள். அவளுடன் புறப்பட்டு மதுரையை யடைந்தான். கண்ணகியின் காற்சிலம்பை விற்கும்பொருட்டு ஒரு பொற்கொல்ல னிடம் சென்ருன். அக் கொல்லன் ஏற்கனவே அரண் மனையில் களவுபோன சிலம்பை இவன் திருடினுன் என்று அரசனிடம் புனைந்துரை புகன்ருன். பாண்டிய னுகிய நெடுஞ்செழியன் கோவலனைக்கொல்வித்தான்.

கண்ணகி சீற்றம்

அதனை யறிந்த கண்ணகிதேவி ஆற்ருெணுத் துயருடன் அரசனிடம் சென்று தனது மற்ருெரு காலில் இருந்த சிலம்பைக் கொண்டு தன் சிலம்பில் மாணிக்கப் பரல் இருப்பதை அறிவித்துத் தன் கண வன் கள்வன் அல்லன் என அறிவித்தாள். நெடுஞ் செழியன் 'நானே கள்வன்' எனக் கீழே வீழ்ந்து உயிர் துறந்தனன். அவன் மனைவி கோப்பெருந்தேவியும் வீழ்ந்து மாண்டனள். கண்ணகி சினந் தணியாது தனது கொங்கையைத் திருகி எறிந்து மதுரையை எரித்துவிட்டு, வையை ஆற்றங்கரை யோரமாகப் பதினுன்கு நாட்கள் நடந்து செங்குன்று என்ற மலை மீது ஏறி ஒரு வேங்கை மரத்தின்கீழ் நின்ருள். அங்கே தெய்வ வடிவுடன் தோன்றிய கோவலனுடன் சுவர்க்கம் புகுந்தாள்.

செங்குட்டுவன்

செங்குட்டுவன் என்ற சேர மன்னன் கண்ணகியின் பெருமையை மலைவேடர் கூறக் கேட்டு, வடநாட்டு மன்னர்களாகிய கனக விசயரை வென்று, இமயமலையிலிருந்து கல் கொணர்ந்து கண்ணகி படிமஞ் செய்து, கோயில் எழுப்பி வழிபாடு புரிந்தான்.

## அறநெறி காப்பியம்

இளங்கோவடிகள் இந்த வரலாற்றை, மதுரை சங்கப் புலவர் சாத்தனுர் நேரில் தான் கண்டதைக் கூறக் கேட்டுப் பாடி முடிக்கின்றபோது அறநெறிகளை; அமுதமொழிகளால் உலகிற்கு உணர்த்துகின்ருர்:

....................திருத்தகு நல்லீர்!
பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொல் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க் கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீ நட்பு இகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருள்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின் பிழை உயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உள்நாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்.

# 3. திருவள்ளுவர்

[திருக்குறள் பரந்த நோக்கோடு, எம் மதத்தையும் சாராது, பொது நிலையில் நின்று, ஏனோரும் வானோரும் ஒப்புக் கொள்ளும் வகையில் சிறந்து நிற்கின்றது என்பதை இக் கட்டுரை தெளிவுற விளக்குகின்றது.]

திருவள்ளுவர் என்பவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் அவதரித்தவர்.

வெப்பம் அதிகமான பொழுது, வானத்தில் மேகந் தோன்றி மழை பொழிவது இயல்பு. அதுபோல் அநீதியான வெப்பம் மிகுதியானபோது, ஞானமாகிய வானத்தில் அருளாகிய மேகந் தோன்றி, நீதியாகிய மழை 1330 முறை பொழிந்தது.

அந்த நீதிநீர் பள்ளம் மேடு முதலிய எல்லா இடங்களிலும் இன்னும் தேங்கி நிற்கிறது; அறவுலகம், பொருளுலகம், இன்ப உலகம் என்ற மூன்று உலகங்களும்செழித்தன: அம் மேகந்தான் திருவள்ளுவர்; அம்மழை நீர்தான் திருக்குறள்.

## பொது நூல்

திருவள்ளுவர் பரந்த நோக்கம் உள்ளவர்; எம் மதத்தையும் சாராது, பொது நிலையில் நின்று, ஏனோரும் வானோரும் ஒப்புக்கொள்ளுகின்ற முறையில் திருக்குறளைப் பாடி உதவி யருளினர்; யார் மனமும்

நோவாது அறங்களை இடித்துக் கூறும் இயல்புடைய வர்.

மனிதனும் தேவனும்

மனிதர்களில் மூன்று பிரிவு உண்டு. மனிதரில் விலங்கு; மனிதரில் மனிதர்; மனிதரில் தேவர்.

ஆசை யுள்ளம் படைத்தவன் விலங்கு; அன்பு உள்ளம் படைத்தவன் மனிதன்; அருள் உள்ளம் படைத்தவன் தேவன்.

“தேவன்” என்ற சொல்லுக்கு ஒளியுடையவன் என்பது பொருள். திவ்ய என்ற பகுதியடியாகத் தேவன் என்ற சொல் பிறந்தது.

தனக்கென்று வாழ்கின்றவன் விலங்கு.

பாதி தனக்காகவும், பாதி பிறருக்காகவும் வாழ் கின்றவன் மனிதன்.

பிறருக்கென்றே வாழ்கின்றவன் தேவன்.
ஆசை வாழ்க்கை இருள் சூழ்ந்தது.
அன்பு வாழ்க்கை இன்பமயமானது.
அருள் வாழ்க்கை ஒளி மயமானது.

திருவள்ளுவர் மனிதரில் தேவர். அதனுல் அவரைத் திருவள்ளுவ தேவர் எனப் பெரியவர்கள் கூறுவார்கள்.

மற்றும் தெய்வப் புலமை என்று திருவள்ளுவரை யும், சேக்கிழாரையுமே குறிப்பிடுவது ஆன்ருேர் மரபு.

சுருக்க விளக்கம்.

ஞானத்தின் திருவுருவாகிய தட்சிணுமூர்த்தி, சனகாதி முனிவர்கள் நால்வர்க்குச் சகல வேதஆகம புராணங்களின் முடிவாகிய உட்பொருளைத் தமது திருக்கரத்தால் சின் முத்திரையாகக் காட்டி உப தேசித்தருளினுர்.

நிறைந்த அறிவுள்ளவர்கள் குறிப்பாலும், சுருங் கிய சொற்களாலும் விளக்கிவிடுவார்கள். பல்லா யிரம் சொற்களால் சொல்ல வேண்டியதைப் பேரறிஞர்கள் சில சொற்களால் அழகாகவும், அரு மையாகவும் சொல்லுவார்கள்.

திருமால் குறளாகி (குள்ள வடிவினராகி) இரண்டு அடியால மூன்று உலகங்களையும் அளந்தார். திருவள்ளுவர் ஒன்றேமுக்கால் அடியால் பதினுலு உலகங்களையும் அளந்துவிட்டார்.

கடவுள்

முதலாவதாக அவர் "கடவுள்" வாழ்த்து என்று கூறினுர்.

'கடவுள்' என்ற சொல் 'செலுத்துவது' என்ற பொருள் பயக்கும். கடவுதல்-செலுத்துதல். செய் வது செய்யுள் என வந்ததுபோல், உலகங்களையும் உயிர்களையும் செலுத்துவது கடவுள். உயிர்க்குயிராய் நின்ற பொருள் கடவுள்.

ஒரு வண்டியைச் செலுத்துகிறவன் அந்த வண் டிக்குள்ளேயே இருந்து செலுத்துவதுபோல், கடவுள் உடம்புக்குள் — உயிருக்குள் நின்று இவற்றைச்

செலுத்துகிருன். எள்ளுக்குள் எண்ணெயைப்போல், உயிருக்குள் உயிராய் இறைவன் இருக்கின்ருன்.

> "உரை சேரும் எண்பத்து நான்கு நூருயிரமாம்
> யோனிபேதம்
> நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்
> ஆங்காங்கே நின்ருன்."

என்கின்ருர் திருஞானசம்பந்தர்.

ஆகவே திருவள்ளுவர் இறைவனைக் கடவுள் என்ற சொல்லாலேயே உணர்த்தினர்.

### வாழ்த்துவதேன்?

கடவுளை ஏன் நாம் வாழ்த்தவேண்டும்? என்ற ஒரு வினு எழும். நாம் வாழ்த்தியா கடவுள் வாழப் போகின்ருர்? எப்போதும் அழிவற்ற பொருளாக, இன்ப வடிவினராக, எல்லாம் செய்ய வல்லவராக, முடிவில்லா ஆற்றலுடையவராக இருப்பவர் கடவுள், அப்படியிருக்க, அவரை வாழ்த்துவது எற்றுக்கு?

ஒரு நூலில் ஆயிரம்மணிகளைக்கோர்த்துவைத்திருக்கின்றது. ஆயிரம்மணிகளையும் அசைக்கவேண்டுமாஞல் ஒவ்வொரு மணியாகப் பிடித்து அசைப்பது அறிவுடைமையாகாது. ஆயிரம் மணிகளுக்குள்ளும் ஊடுருவி நிற்கும் நூலைப் பிடித்து அசைத்தால் ஆயிரம் மணிகளும் தாமே அசையும். அதுபோல் எல்லாவுயிர்களுக்குள்ளும் உயிருக்குயிராய் ஊடுருவி நிற்கும் இறைவனை வாழ்த்திஞல் எல்லா உயிர்களும் வாழும்.

**நீடு வாழ்வார்**

இந்த அரிய கருத்தையொட்டியே திருவள்ளுவர்,

"மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்"

என்று கூறினர்.

ஆன்மாக்களின் இதய தாமரையாகிய தகரா காசப் புண்டரீகத்தில் விளங்குகின்ற எம்பெருமானை வாழத்தி, வணங்கி, வழிபடுவார் என்றும் இன்புற்று நீடு வாழ்வார்.

எல்லாவுயிர்களும் ஈசன் கோயில்கள்; ஆதலின் அவ்வுயிர்கள் அனைத்தையும் ஓம்புதல்வேண்டும். இதுவே ஆன்றோர்கள் தொகுத்த அறங்கள் அனைத்திலும் தலையாயது என்று கூறுகின்றார்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை"

**உயிர்க் கருணை**

உயிர்களிடத்து அளவு கடந்த கருணை வைத்தாலன்றி கடவுள் கருணையைப் பெறமுடியாதென்பது வள்ளுவரின் முடிந்த - முடிவான கருத்து, அவர் கூறும்போது அந்தக் கருத்தைச் சிறிதுகூட மயங்க வைக்காது தெளிவாகத் தெரிவிப்பார்.

"ஒன்றாக நல்லது கொல்லாமை: மற்றதன்
பின்சாரம் பொய்யாமை நன்று"

இவ்வாறு திருவள்ளுவர் அநேக அறங்களை அழகாகவும், ஆழமாகவும், தெளிவாகவும், இனிமையாகவும் கூறியுள்ளார்.

# 4. திருக்குறள்

(அறம் பொருள் இன்பம் ஆகிய முப்பால் வேதம் திருக்குறள், விரிந்த கருத்துக்களை மிகச் சுருங்கிய சில சொற்களால் கூறும் திற முடையது திருக்குறள். இக்கட்டுரையில் "விருந் தோம்பல்" எனும் அதிகாரத்தில் வரும் "செல் விருந்தோம்பல்" என்ற குறைகளுக்கு மேலான கருத்தொன்றை விளக்குவது சிந்தைக்கும். செவிக்கும் அரிய விருந்தாய் அமைந்திருக்கிறது)

## குறள்

திருக்குறள் பொய்யில் புலவராகிய திருவள்ளுவர் பாடியருளியது 1330 பாட்ல்களையுடையது;சிந்தைக்கு இனியது; செவிக்கு இனியது. வந்த வினைக்கு மருந் தாக இருந்து உதவுவது. அறம் பொருள் இன்பம் எனும் முப்பாலை யுடையது.

## அது முப்பால் வேதம்

சுருங்கச் சொல்லல். விளங்க வைத்தல். என்ற அழகுகளையுடையது திருக்குறள். மிக விரிந்த கருத் துக்களை மிகச் சுருங்கிய சில சொற்களால் கூறும் திறமுடையது திருக்குறள். ஒரு முறைக்கு பத்து முறை கூறு' என்று ஆன்றோர்கள் கூறுவார்கள். திருக்குறளும் ஒவ்வொரு பொருளைப் பற்றிப் பத்துப் பத்துப் பாடல்களாகக் கூறுகின்றது. கோயில்களில்

பெருவிழாவும் கொடியேற்றி பத்துநாள் கொண்டாடு கின்றார்கள்; திருமாலும் உலகம் உய்யுமாறு பத்து முறை அவதாரஞ் செய்தார்.

### அரிய நீதி நூல்

இனி தமிழ் எழுத்துக்களில் முதல் எழுத்து 'அ'. இறுதி எழுத்து 'ன்'. திருக்குறளில் முதற் குறள் அகரத்திலேயே தொடங்குகின்றது.

> அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> ப்பகவன் முதற்றே உலகு.

இறுதிக் குறள் 'ன்' என்ற எழுத்தில் முடிவு பெறுகின்றது.

> ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம்
> கூடி முயங்கப் பெறின்.

இதனால் தமிழ் எழுத்துக்களில் முதல் எழுத்தில் தொடங்கி, முடிவு எழுத்தில் முடிகின்ற நூல் இந்த நூல் ஒன்றுதான்.

தன்னிலையில் அணுத்துணையும் சிதையாததும், பாடபேதம் இல்லாததும் ஆகிய நூல். இது இரண் டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகம் செய்த தவப் பயனாய் எழுந்த அரிய நீதிநூல். இதில் அடங்காத நீதி ஒன்றுமில்லை.

### விருந்தோம்பல் பொருட்டே

கண்வனும் மனைவியும் கூடி வாழ்வது எதன் பொருட்டு? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு,

அந்த வினவுக்கு அருமையாக விடை கூறுகின்றது திருக்குறள்.

நாயகனும் நாயகியும் வீட்டில் இருந்து செல்வத்தை ஓம்பி வாழ்கின்ற காரணம், விருந்தினரை ஓம்பி உதவி செய்யும் பொருட்டே என்று கூறுகின்றது திருக்குறள்.

> இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செயதற் பொருட்டு.

விருந்தோம்புவதே மேலான கடமை.

> விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
> மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

இனி அரிய திருக்குறள் ஒன்றைச் சிந்திப்போம்.

> செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
> நல்விருந்து வானத் தவர்க்கு.

பரிமேலழகர் இதற்கு "தன்கட் சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக் கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனேடு உண்ண விருப்பான்" என்று உரை எழுதி யிருக்கின்ருர்.

**செல்விருந்து**

செல்விருந்து என்றதற்கு "தன்னே நாடிச் சென்ற விருந்து" என அது பொருள் தருகின்றது.

இதனினும் மேலான பொருள் ஒன்றை இங்கு கூறுகின்றேன்;

நமது நாட்டில் இருந்த சில ஞானிகள் ஆகார விஷயத்தில் அஜகரம் என்ற விருத்தியை மேற் கொண்டவர்கள். அஜகர விருத்தி என்ருல் மலைப் பாம்பு போன்று உண்பது என்று பொருள்; மலைப் பாம்பு உணவை நாடி எங்குஞ் சொல்லுவதில்லை. அது இருக்குமிடத்திற்கு யதேச்சையாக ஒரு பிராணி வரு மாஞல், அதனைப் பிடித்து அருந்தும்.

**வந்தால் அருந்தும் ஞானிகள்**

அதுபோல அந்த ஞானிகள் எங்கும் உணவை நாடித் தேடிச் செல்லமாட்டார்கள். அவர்கள் தன் னிச்சைபோல் சென்றுகொண்டிருப்பார்கள்; அவர் களைத் தேடிக்கொண்டுபோய் உணவு தரவேண்டும். இந்த வகையில் சேர்ந்தவர் பட்டினத்து சுவாமிகள்.

> "இருக்குமிடந் தேடி என்பசிக்கே யன்னம்
> உருக்கமுடன் கொண்டு வந்தால் உண்பேன்—பெருக்க
> அழைத்தாலும் போகேன் அரனேஎன் தேகம்
> இளைத்தாலும் போகேன் இனி"

என்று கூறுவதிலிருந்து அவர் அஜகர விருத்தியை மேற்கொண்டவர் என்பது தெளிவாகின்றது.

எனவே செல்விருந்து என்ருல், வீடு தேடி வராது தன் விருப்பம்போல் செல்லுகின்ற சிவஞானி களைத் தேடி உணவு தந்து ஓம்புதல் வேண்டும் என்று பொருள் கொள்ள வேண்டும்.

இவ்வாறு செல்விருந்தை ஓம்பியும், வரு விருந்தை எதிர்பார்த்து ஆதரித்தும் உதவுகின்ற தரும குணசீலனை, தேவர்கள் தமக்கு நல்விருந்து என எதிர்பார்த்து உபசரித்துச் சிறப்புச் செய்வார்கள் என்று பொதுமறை கூறுகிறது.

இவ்வாறு அரிய பெரிய கருத்துக்களை விளக்கி நமக்கு நலஞ்செய்கின்ற அமுதத் தமிழ் திருக்குறள்.

ஓதுக குறளை

இதனைப் படிக்கக்கூடாது. படிப்பது என்பது அழகும் அருமையும் இன்றிப் படிப்பது ஆகும்.

ஓதுவது என்பது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவதாகும்.

எனவே திருக்குறளை ஓதுதல் வேண்டும். திருக்குறள் உண்மை மொழியாகும். அருணகிரிநாதர்,

> "திருவள்ளுவ தேவர் வாய்மை என்கின்ற
> பழமொழியை ஓதியே உணர்ந்து"

என்கின்றார்.

ஆகவே, வானோரும் போற்றும் திருக்குறளை, ஏனோரும் ஓதி உணர்ந்து நலத்தைப் பெற்று உய்வார்களாக.

———

## 5. சிலே எடுத்ததேன்

[யாழ் வாசிக்கும் பாணராகிய அந்தகக் கவி வீரராகவ முதலியார், இலங்கை வேந்தனைப் பாடி, மகிழ்வித்துப் பரிசில் பெற்ருர். புலவருக்குச் சிறு நிலப் பகுதியை வழங்கினுன் வேந்தன். அதுவே 'யாழ்ப்பாணம்' எனும் பெயரால் வழங்கி வருகிறது. இக் கட்டுரை, பழங்காலப் புலவர்களின் அறிவுத் திறத்தையும், கவி யின்பத்தையும் அழகுற விரித்துரைக்கின்றது.]

அந்தகக்கவி வீரராகவ முதலியார் என்பவர் ஒரு சிறந்த புலவர்; அவர் பிறவியிலேயே கண்ணில்லாதவர்; அறிவுக் கண் படைத்தவர்; அழகிய பாடல்களை விரைந்து பாடக் கூடியவர்; தக்கோர்களால் மதிக்கப் பெற்றவர்.

ஒரு நாள் அவருடைய மனைவி அவரைச் சற்று அவமதித்தாள். அதனைக் கண்டு மனம் பொருத புலவர், "நான் சென்று யானை பரிசு பெற்று, எல்லா விருதுகளுடனும் வருவேன்" என்று கூறிப் புறப்பட்டார்.

### கட்டமுது

வழியில் ஒருகுளக்கரையில் கட்டமுதைவைத்து விட்டு குளித்து இறைவனைக் குறித்து தியானம் புரிந்துகொண்டிருந்தார். கட்டமுதை ஒரு நாய்

வந்து வாயினுல் கவ்வி எடுத்துக்கொண்டு ஓடிவிட்டது புலவருக்குக் கடும்பசி; பாவம்! உடனே ஒரு கட்டளைக் கலித்துறை பாடுகின்ருர்.

சிறந்த ஆடையில்லாத வயிரவருடைய வாகனமாகிய நாய் வந்து, பிரம்ம தேவருடையவாகனமாகிய அன்னத்தைப் பற்றிக்கொண்டு, நாராயணனுடைய வாகனமாகிய கருடனைப்போல் பறந்து ஓடிவிட்டது; ஆட்டு வாகனமுடைய அக்கினிதேவன் வந்து என் வயிற்றைப் பற்றிக்கொண்டான்.

சீராடை யற்ற வயிரவன் வாகனஞ் சேரவந்து
பாராரு நான்முகன் வாகனந் தன்னைமுன் பற்றிக்கவ்வி
நாராயணனுயர் வாகனமாயிற்று நம்மை முகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றில் பற்றினனே.

### சிவ சிதம்பரம்

பின்னர் புலவர்பெருமான் கடல் கடந்து இலங்கை சென்ருர். அப்பொழுது, இலங்கையைப் பரராஜசிங்கம் என்ற மன்னவன் அரசு புரிந்து கொண்டிருந்தான். அங்குள்ளவர் இவரை அரண்மனைக்குள்ளே அனுப்பாது தடை புரிந்தார்கள்.

புலவர் நான்கைந்து நாட்கள்காத்திருந்து மெல்ல அரண்மனைக்குள் சென்ருர். குருட்ரைக் கொற்றவன் பார்க்கக்கூடாது என்ற ஒரு சம்பிரதாயத்தை நினைத்து அங்குள்ள அமைச்சர்கள் புலவரை அரசன் நேரே பாராத வண்ணம், ஒரு பட்டுத் திரையிட்டு வைத்தார்கள்.

திரைக்கு அப்பால் மன்னவன் நின்றான். கண்ணில்லாத புலவர் திரையிட்டதனை அறியார். அவருடன் வந்த சீடன் இதனைக் கண்டான். தன் எஜமானனுக்கு எப்படிக் கூறுவது என்று சிந்தித்தான். மெல்ல இறைவன் நாமத்தைக் கூறுவதுபோல், 'சிவ சிதம்பரம்' என்றான். சிதம்பரத்தில் திரையிட்டதைக் குறிப்பினால் இச்சொல் உணர்த்தியது.

### அண்ணாமலை

இதனைக் கேட்ட அந்தகக் கவி வீராகவ முதலியார் 'அண்ணாமலை' என்றார். உடனே திரை தீப் பிடித்தது. திருவண்ணாமலை நெருப்புத் தலம் ஆதலின் அப்படி நெருப்புப் பிடித்தது.

இதனைக் கண்ட பரராஜசிங்கன், அதிசயம் உற்றான், "இந்தச் சீடன் என்னவோ சொன்னான்! புலவர் ஏதோ கூறினார்; திரை தீப்பிடித்துவிட்டது. இவர் பெரிய ஆள் போலும்" என்று கருதினான்.

புலவர், "மன்னர் பெருமானே! நான் அறிவையே கண்ணாகப் படைத்தவன். இந்த ஊனக் கண்ணில்லையாதலால், என்னைக் காணக்கூடாது. என்று திரையிட்டது நியாயமோ?" என்றார்.

உடனே அரசர் பெருமான் "புலவரே! தாங்கள் அறிவையே கண்ணாக உடையவர் என்பது உண்மையாயின்; நான் எந்த நிலையில் நிற்கிறேன் என்பதை விளக்கமாகக் கூறும்' என்றான்,

### சிலை எடுத்ததேன்

பரராஜசிங்கன் என்ற மன்னவன் இடக்கையில் வில் பிடித்து நின்றிருந்தான்.

இதனை உணர்வால் உணர்ந்த புலவர் பெருமான் பாடுகின்றார்.

"வாழும் இலங்கைக் கோமானில்லை; மானில்லை;
ஏழு மராமரங்கள் இங்கில்லை...ஆழி
அலையடைத்த செங்கை அபிராமா! இன்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு!"

கடலின் அலையை அணையிட்டு அடைத்த சிவந்த கரங்களையுடைய அபிராமனே! இலங்கையில் முன்னாள் வாழ்ந்த இராவணன் இல்லை; மாரீசனாகிய மானும் இல்லை; மராமரங்கள் ஏழும் இங்கில்லை; கலை எடுத்து வந்த என்முன்னே சிலையெடுத்து நின்றனையே? என்ன காரணம்?'— என்ற பொருளில் அழகிய வெண்பாவைப் பாடினார்.

மன்னவன் அமுதம்போன்ற அரிய செந்தமிழ்ப் பாட்டைக் கேட்டான. மனம் மட்டற்ற மகிழ்ச்சியுற்றான். புலவரைத் தழுவினான்; ஆதரவு செய்தான்; சில தினங்கள் தன்னுடன் இருத்தினான். அவர் பாடும் தமிழ்ப் பாடல்களைக் கேட்டு இன்புற்றான். அவருக்குப் பெரிய வட்டாரம் ஒன்றைப் பரிசாக வழங்கினான். யாழ் வாசிக்கும் பாணராகிய அவருக்கு வழங்கிய அந்தப் பகுதியே, யாழ்ப்பாணம் என்ற பெயரால் வழங்கலாயிற்று. பொன்னும், மணியும், ஆனையும் வழங்கி அனுப்பினான்.

## 6. மேலோரும் கீழோரும்

(மேன்மக்கள் பிறர்க்கு என்றும் உதவி புரிவர். கீழோர் உதவியோரையும் வெறுத்து, விரோதம் புரிவர்; தமது நிலையி னின்றும் மாருத உத்தம குணம் படைத்த உறுதியாளர் மேன்மக்கள். சங்கைச் சுட் டாலும் கரியாகாது; அது வெண்மையா கவே இருக்கும். சங்கை ஒத்த தன்மையர் மேன்மக்கள். "மேலோர்—கீழோர்" தன் மைகளைத் தெளிவுற விளக்குகிறது இக் கட்டுரை.)

**மேன்மக்கள்**

மேன்மக்கள் எப்போதும் தமது நிலையினின்றும் மாற மாட்டார்கள்; தமக்கென்று உரிய கொள்கை யில் உறுதியுடன் நிற்பர்; தமக்குப் பிறர் அழிவு தேடி ஞலும் உத்தம குணத்துடன் விளங்குவார்கள்.

**தூய உண்மை**

உலகிலுள்ள பொருள்களைச் சுட்டால், அவை கரியாகிவிடும். சங்கு மட்டும் சுட்டாலும் கரியா காது; வெண்மையாகவே காட்சி தரும். சங்கு வெண்மையானது. சுட்டாலும் வெண்மையான உண்மையினின்று அது பிறழாது.

"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்"

என்று ஔவையார் கூறுகின்றனர்.

### பெரியோர் தன்மை

கானகத்திலேயுள்ள வேல், ஆல், அரசு, புளி, புங்கு, கள்ளி முதலிய மரங்கள் வெட்டியவுடன் விறகு என்று பேர் பெறுகின்றன. நின்ருல் மரம்; கொன்ருல் விறகு; அவற்றை விற்கின்ற இடம் விறகுக் கடை எனப் பேர் பெறும்.

தேககு சந்தனம் முதலிய ஜாதி மரங்கள் வெட்டப்பட்டாலும், சிறு துண்டுகளாக்கினும் மரம் என்றே பேர் பெறும். அவற்றை விற்கின்ற இடம். மரக்கடை எனப்படும். நாற்காலி முதலியனவாகச் செய்து வைத்திருந்தாலும் மரம் என்றே கூறுவர்.

அதுபோல் பெரியவர் எத்தனைச் சிறுமைவரினும் தமது நிலையினின்றும் மாறமாட்டார்கள்.

இனி, தமக்கு உதவி புரியாதவர்களிடத்திலும் கருணை காட்டுவர் மேன்மக்கள்.

### கீழ் மக்கள்

கீழ்மக்கள் பலகாலும் உதவி புரிந்தோரையும் அலட்சியம் புரிவார்கள். நன்றி பாராட்டுகின்ற தன்மை கீழோரிடம் இராது.

இந்த உயர்ந்த கருத்துக்களை ஒரு புலவர் ஒரு நிகழ்ச்சியிலேயே வைத்துக் கூறுகின்றார்.

**கற்புக்கரசி**

உத்தமமான கணவனும் மனைவியும் இல்லற வாழ்வில் இனிது வாழ்ந்தார்கள். மனைவி நாள் தோறும் கணவனுருக்கு இனிய உணவு படைப்பாள்; வீசிறுவாள்; இன்னுரை கூறுவாள்: இரவில் படுக்கை விரித்துக் கணவரைப் படுக்க வைப்பாள். பயபக்தி விசுவாசத்துடன் கால்களை வருடுவாள். இவ்வாறு நாள்தோறும் கற்புக்கரசியாகிய அக் காரிகை ஒழுகி, நாயகனுக்கு நலம் புரிந்து வந்தாள்.

**அன்புக் கணவன்**

பொருளீட்டுதற் பொருட்டு நாயகன் தன் மனைவி யிடம் பிரியா விடை பெற்றுப் புறப்பட்டான். அன்புள்ள கணவன்; அம் மாதரசியை விட்டுப் பிரிய மனம் இன்றி, உள்ளம் உலைந்து, இன்றியமையாத கருமத்தின் பொருட்டே புறப்பட்டான்.

அப்பெண்மணி உடம்பை விட்டு உயிர்போவது போல தன் கணவனுர் போவதைக் குறித்துப் பெரி தும் வருந்தினுள், கண்ணீர்த் துளி சிந்த உள்ளம் உருகி நின்றுள். க்ணவனுரின் திருமேனியைய்யே உறறு நோக்கிய வண்ணம் நின்றுள்.

செல்லுகின்ற கணவன் அடிக்கடி மனைவியைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றுள்.

அந்த உத்தமி கூறுகிருள்:

“நான் நாள் தோறும் அன்புரை கூறி, என் மெல்லிய கரங்களால் வருடப் பெற்ற கால்கள் என்னை விட்டுப் பிரிந்து செல்கின்றன. என்னுல் ஓர் உதவியும் பெருத கண்கள் திருமபித் திரும்பிப் பார்க்கின்றன.

கண்கள் மேலானவை; கால்கள் கீழானவை; மேலான கண்கள் இரங்குகின்றன; கீழான கால்கள் என்னை விரோதிக்கின்றன.

இந்தக் கருத்தையே வைத்து ஓர் இனிய பாடலாகப் பாடுகின்ருள்; அந்த அரிய பாடல் இதோ வருகிறது.

“மாலோதி நித்தம் தமியேன் வருந்தி வருடப்பெற்ற
காலோ நடந்தன; கண்ணோ திரும்பின; கற்றவர்க்குப்
பூலோகமும் தரும் மாவலி வாணன் பொருப்பிடத்தே
மேலோர் இரங்குவர்; கீழோர் எந்நாளும் விரோதிப்பரே.

ஆதலால் மேலோர் என்றும் உதவி புரிவார். கீழோர் உதவி பெற்றவரையும் வெறுத்து விரோதம் புரிவர். மேலேயுள்ள தமிழ்க்கவி, மேலோரது தன்மையையும் கீழோரது தன்மையையும் நன்குவிளக்குகின்றது.

---

# 7. களவழி நாற்பது

(மானத்தைக் காக்க உயிர் விடுத்தான் சேர மன்னன். நண்பரின் மரணத்தைக் கண்டு புலவர் பெருமான் மாண்டார்; சாகு முன் "களவழி நாற்பது" பாடினார். சேரனையும், புலவனையும் அறியாமையால் பிரித்த பாவத்திற்காக வருந்துகின்றான் சோழ மன்னன். அக்கதையை இக்கட்டுரை விவரிக்கிறது.)

வனத்தினால் விலங்குகள் வாழ்கின்றன; விலங்குகளால் வனம் வளம் பெறுகின்றது. வனம இல்லையேல் விலங்குகள் வாழ 'முடியாது. விலங்குகள் இல்லையேல் வனத்தை மக்கள் அழித்து விடுவார்கள். ஆகவே ஒன்றுக்கு ஒன்று தொடர்புடையது.

## மன்னனும் புலவனும்

இதுபோல் அரசனிடத்திலே புலவன் வாழ்ந்து மதிப்பையடைவான். புலவனால் அரசனுக்குப் பெருமையுண்டாகும். அரசாங்கப் புலவன் என்றும், மன்னவர் மதிக்கத்தக்கவன் என்றும் புலவனுக்கும் புகழ். உயர்ந்த புலவன் இருந்தால் இப்படி ஒருவருக்கு ஒருவரால் உயர்வு ஏற்படுகின்றது. வனம் போல், மன்னவன், வனத்தில் வாழும் சிங்கம் போன்றவன் புலவன். உயர்ந்த விலங்கு வாழ்வதனால் காட்டை உலகத்தவர் புகழ்வர். "அது ஆனைக்

காடு" "அக்காட்டில் சிங்கம் வாழ்கின்றது" என்று கூறுவர்.

### சேரனும் பொய்கையாரும்

ஒரு சிறந்த புலவர் இருந்தால் மன்னவனுக்கு மட்டற்ற புகழ் உண்டாகும். சடையப்ப முதலியா ரால் கம்பருக்கு நன்மை. கம்பரால் சடையப்பருக்கு அழியாத புகழ் உண்டாயிற்று.

அக்காலத்தில் அரசர்கள் தக்க புலவரைத் தமது சபையில் வைத்துப் போற்றிப் புகழ்ந்து சிறப்பித்தார் கள்; சேரநாட்டைச் சேரமான் கணைக்காலிரும் பொறை என்ற மன்னவன் அரசு புரிந்து வந்தான். அம்மன்னவனிடம் பொய்கையார் என்ற புலவர்பெரு மான் இருந்தார். அவர் கற்றவர்க்குத் திலகம் போன் றவர்; அறிவாற்றலில் சமானம் இல்லாதவர். தேனி னும் இனிய செந்தமிழ்ப் பாடல்கள் பாடும் தனிப் பெருஞ் சிறப்புடையவர். பொய்கையாருடைய புகழ் மணம் பூதலம் எங்கும் பரவியிருந்தது. இவர் நண்ப ராக இருந்தபடியால் கணைக்காலிரும்பொறைக்கு எல்லையில்லாத பெருமை ஏற்பட்டிருந்தது.

### சோழனின் மமதை

அதே சமயம் சோழ வள நாட்டின் தலைநகராகிய உறையூரில் செங்கணான் என்ற சோழன் ஆண்டுவந் தான். அவன், 'பொய்கையாருடைய தொடர்பினால் சேர மன்னனுக்குப் புகழ் ஏற்பட்டுள்ளது. ஆதலால்

நாமும் பொய்கையாரை அழைத்து, அவரை நமது சபையில் வைத்துப் பாராட்டி, அவரிடம் தமிழ் பயின்று புகழ்பெற வேண்டும்' என்று கருதினன்.

அப்படிக் கருதிய அவன் தானே சென்று புலவரைத் தொழுது அழைப்பது முறை. அரசன் சிறிது தருக்குடையவன்; நான் என்ற மமதையுடையவன்; புலவரை யழைக்கவேண்டிய முறையறியாத முரட்டு மன்னன்;தோள்வலியாலும் வாள் வலியாலும், படை வலியாலும் நான் பெரியவன் என்ற அகங்காரத்தால் தலை கிறுகிறுத்தவன், புலவரை அழைத்து வருமாறு ஒரு தூதனை ஏவினன்.அத் தூதன் சேரநாடு சென்று பொய்கையார் என்ற புலவரைப் பார்த்து, "ஐயா! எங்கள் சோழ மன்னன் செங்கணன்; தங்களைத் தன் பால் வந்து தங்கியிருக்குமாறு அழைக்கின்றார். சேர நாட்டைப் பார்க்கினும்,சோழநாடு வளமையுடையது சேரனைப் பார்க்கிலும் சோழமன்னன் சிறப்புடையவன். ஆகவே புறப்பட்டு வாருங்கள்" என்றான்.

### புலவர் மறுப்பு

புலவர் அந்த ஏவலனைப் பார்த்து, "அப்பா! நான் என் நண்பன் கணைக்காலிரும்பொறையை விட்டு நீங்கியிரேன். ஆகவே வருவதற்கு அனுகூலம் இல்லை என்று உங்கள் மன்னவனுக்குச் சொல்" என்றார். தூதன் போய் சோழனிடம் புலவர் வர மறுத்ததை யுரைத்தான்.

### சோழன் சீற்றம்

சோழனுக்கு மிக்க வருத்தம் உண்டாயிற்று. மீளவும் அத்தூதனை "சேரனிடம் போய், புலவனை அனுப்பி வைக்குமாறு கூறு" என்று அனுப்பினான்.

தூதன் சேரனிடம்வந்து பணிந்து, "ஐயா! பொய்கையாரை அனுப்பிவைக்குமாறு எங்கள் மன்னர்பிரான் கூறினர்" என்றான். "தூதனே! புலவரைப் போம் என்றும் இரும் என்றும் கூற எனக்கு உரிமையில்லை. அவர் விரும்பினால் அழைத்துப் போ" என்றான் சேரன்.

தூதுவன் இதனைச் சோழனுக்கு அறிவித்தான். சோழனுக்குச் சீற்றம் எழுந்தது. "புலவனுக்கும் சேரனுக்கும் என்ன மமதை? என்சொல்லை மதித்தார்கள் இல்லை. என்னை அலட்சியம் செய்துவிட்டார்கள். நீ போய் சேரனைப் போருக்கு வரச்சொல்" என்றான்.

### சேர சோழப் போர்

சேரன் போருக்கு வந்தான். சேரனுக்கும் சோழனுக்கும் கடும்போர் நேர்ந்தது. சோழன் எல்லா வகையிலும் வலிமை மிகுந்தவன். அதனால் சேரனை வென்று சிறையில் அடைத்துவிட்டான். கணைக்கால் இரும்பொறை என்ற சேரர்கோன் சிறையில் கிடந்து வாடினான்.

### களவழி நாற்பது

பொய்கையாரையும் பிடித்துச் சிறையில் அடைத்துவிட்டான். மிகப் பெரும் புலவராகிய பொய்கையார் தான் சிறைப்பட்டது பற்றி வருந்தினர் இல்லை. தன்னுடைய நண்பன் சேரன் தன் பொருட்டுச் சிறை புகுந்தது பற்றிப் பெரிதும் வருந்தினர். சேர மன்னனுக்கு விடுதலை கிடைக்குமாறு, களவழி நாற்பது என்ற நூலைப் பாடினர். அதனைச் சோழன்பால் அனுப்பினர். அந்த அரிய நூலைக் கண்ட செங்கணன் பெரிதும் உவகை கூர்ந்தான். உடனே சிறைச்சாலைக்கு ஓடிவந்தான்; சிறையில் இருந்த புலவரை வணங்கினன். அவரைச் சிறையிலிருந்து விடுவித்தான்; அவரைப் பாராட்டினன். "புலவர் பெருமானே! தாங்கள் இணையற்ற அறிஞர்; தங்கட்கு நான் எதையுஞ் செய்யக் கடமைப் பட்டிருக்கிறேன். இந்த அரிய களவழி நாற்பது என்ற நூலினல் நான் பெரிதும் மகிழ்கின்றேன். தங்கட்கு நான் செய்ய வேண்டியது யாது?" என்று வினவினன்.

### சேரன் விடுதலை

பொய்கையார் "சோழவேந்தனே! எனக்கு எப் பொருளுந் தேவையில்லை. என் உயிரினும் இனிய நண்பர் கணைக்காலிரும்பொறையைச் சிறையிலிருந்து விடுவித்தருள்!" என்றார். சோழ மன்னன் 'அப்படியே' என்று கூறி சேரமன்னனை விடுதலை செய்யும் பொருட்டுப் பொய்கையாருடன் புறப்பட்டான்.

### மானமே பெரிது

அந்த நேரத்தில் சிறையில் இருந்த சேரர் சிறைக்காவலனைப் பார்த்து, "தாகவிடாய் அதிகரித்துளது. சிறிது தண்ணீர் கொடு" என்று கேட்டார். கேட்டவர் மன்னர் என்பதையும் அவருடைய பெருமிதத்தையும் எண்ணிப்பாராத அவ்வேலைக்காரன் அலட்சியமாகவும் தாமதமாகவும் சென்று ஒரு ஏனத்தில் நீர் கொணர்ந்து இடக்கரத்தில் நீட்டினான்.

இதனைக் கண்ட சேரமன்னன் மனம் மிகவும் வருந்தியது. "கேவலம் இவ்வேலைக்காரன் என்னைச் சிறிதும் மதியாமலும் ஒரு பொருளாக எண்ணாமலும் அசட்டை செய்து தாமதித்து தண்ணீர் கொணர்ந்து இடக்கரத்தில் நீட்டுகின்றான். இத் தண்ணீரைக் குடித்து இனி உயிர் வாழ வேண்டுமா? உயிரினும் மானம் பெரிதல்லவா? தெய்வமே! இனி யான் வாழ மாட்டேன்; உன் பாதத்திற்கு வருகின்றேன்!" என்று கூறி 'ஈசனே' என்று கண்களை மூடினார். உயிர் பிரிந்து விட்டது.

### சோக நாடகம்

சோழனும் பொய்கையாரும் அதே நேரத்தில் அவரைச் சிறையிலிருந்து விடுவிக்க வந்தார்கள். அவர் உடம்பாகிய சிறையிலிருந்தே தன்னை விடுவித்துக்கொண்டு புறப்பட்டுவிட்டார்.

தனது நண்பன் ஆவி அகல்வதைக் கண்டார் பொய்கையார். 'ஆ நண்பா!' என்று வாய்விட்டு

அலறினர்; அவர் அருகில் அமர்ந்து கண்களை மூடினர்; அவ்வளவுதான். பொய்கையார் ஆவி பிரிந்து விட்டது. இந்தத் துன்பக் காட்சியைச் சோழமன்னன் கண்டான்; "அந்தோ கெட்டேன்! மானத்திற்காக இவர் உயிர் விடுத்தார். நண்பரின் மரணத்தைக் கண்டு புலவரும் மாண்டார். இத்தகைய ஒப்பற்ற உத்தம நண்பர்களைப் பிரிக்க நான் முயன்றேன். என்னால் இவர்கள் மரணமுற்றார்கள். இப் பழி பாவம் என்னை விட்டு அகலாவே! நான் அறியாமையாலும் அகங்காரத்தாலும் கெட்டேன். தெய்வமே! என்னை மன்னிக்கவேண்டும். இவர்களுடைய ஆன்மாக்கள் சாந்தியடைக" என்று வேண்டினன்.

> "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர்நீப்பர் மானம் வரின்"

என்ற திருவள்ளுவரின் திருவாக்குக்குச் சேரமன்னன் இலக்கியமாக நின்றான்.

---

# 8. ஏன் வந்தாய் ?

(கொற்கையில் குலசேகரப் பாண்டியன் ஆட்சி புரிந்தான். அவன் நீதி நெறி தவருத மன்னவன். நீதியின் பொருட்டு உடை வாளால் தன் கையையே வெட்டிக் கொண்டான். கண் கலங்கிய மக்கள், மன்னன் நீதியை எண்ணி அதிசயித்தனர்; அவனுக்குப் பொன்னுல் கைபோல் செய்து பொருத்தினுர்கள். எனவே, அரசனுக்கு, 'பொற்கைப் பாண்டியன்' எனப் பெயர் உண்டாயிற்று; அவ் வரலாற்றைச் சுவை யோடு விளக்குகிறது இவ்வினிய கட்டுரை.)

கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பர் ஒரு நாள் ஒரு சிறு வீட்டில் தங்கியிருந்தார். அவ்வீடு தெற்கு நோக்கி இருந்தது. தெற்கு நோக்கிய வீடு சிறந்தது. வடக்கு நோக்கிய மச்சு வீட்டினும் தெற்கு நோக்கிய குச்சு வீடு மேலானது என்பது பழமொழி.

அக்குச்சு வீட்டிற்கு ஒரு மூங்கிற் கதவு. கம்பர் அந்த வீட்டில் இருந்துகொண்டு தமிழ்க்கவி பாடிக் கொண்டிருந்தார். அச்சமயம் காற்று வீசி அடிக்கடி கதவைத் தட்டியது.

தென்றல்

கதவை யார் தட்டுகின்றது என்று கம்பர் கதவைத் திறந்து பார்த்தார்; ஒருவருமில்லை.தென்றல்

காற்று என உணர்ந்தார். அதனால் அவருடைய கவியியற்றும் கவனம் சிறிது தடைப்பட்டது.

உடனே ஒரு வெண்பாவைப் பாடினார்.

"ஏ தென்றலே! உனக்கென்ன மதியில்லையா? முன்னொரு கால் சிறிதும் ஆராயாமல் குலசேகர பாண்டியன் ஒரு வீட்டின் கதவைத் தட்டி கைபோன கதை உனக்குத் தெரியாதா" என்ற கருத்தில் அப் பாடல் அமைந்துள்ளது.

**கொற்கையில்**

கொற்கை என்ற ஊர் முன்னாளில் துறைமுகப் பட்டினமாகவும், பாண்டி நாட்டின் தென்பகுதிக்குத் தலைநகரமாகவும் இருந்தது.

அந்நகரைக் குலசேகரன் என்ற பாண்டியன் அரசு புரிந்து வந்தான். அம்மன்னன் இரவில் மாறு வேடம் புனைந்து நகர் காவல் புரிவான். குடிகளுக்கு இரவில் கள்ளர் பகைவர்களால் தீங்கு நேரக்கூடாது என்று கருணை நிறைந்த காவலன் இரவில் ஊரைச் சுற்றிப் பார்த்து காவல் புரிவான்.

ஒரு நாள், நள்ளிரவில் காவல் புரியும்போது அக்ரகாரத்தில் ஓர் அந்தணர் காசி யாத்திரை போக மனைவியிடம் விடை கேட்டனர். மனைவி தனித்திருக்க அஞ்சுகின்றேன் என்றாள்.

**குலசேகரன் காவல்**

அந்தணர் "கருணை நிறைந்த நமது மன்னர் பெருமான் அருள் உனக்குத் துணை புரியும்" என்று

கூறித் தேற்றினர். அடுத்த நாள் அவர் காசி யாத்திரை சென்ருர். இதனைக் கேட்ட குலசேகரப் பாண்டியன், அந்தணர் தனது அருளாட்சியை நம்பியே இளமையுடைய மனைவியைத் தனித்திருத்தி யாத்திரை சென்றுள்ளார். நாம் இனி அந்த வீட்டின் பாதுகாவலில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். என்று எண்ணி இரவில் நகர் காவல் புரியும்போது அந்த அந்தணர்வீட்டினை அடிக்கடி கவனித்துவந்தார்.

ஆறு திங்கட்குப் பின் அவ்வீட்டில் ஓர் ஆண் குரல் கேட்டது. அரசன் நடு இரவில் இந்த வீட்டில் ஆண் குரல் கேட்கக் காரணம் யாது என ஐயுற்ருன். உள்ளே யிருப்பவனை இன்னுன் என்று அறிய வேண்டும்; வீட்டு வேதியர் என்னையல்லவா நம்பி விட்டிருக்கின்ருர் என்று கருதி, மெல்ல கதவைத் தட்டினன்.

உள்ளேயிருப்பவர் 'யார் அங்கே' என்ருர். அவர் குரலால் அவர் யாத்திரை சென்று மீண்ட வீட்டு அந்தணர் என அரசன் உணர்ந்தான். இனி நடு இரவில் நாம் கதவைத் தட்டியதனல் அந்தணர் தன் மனைவியின் கற்பொழுக்கத்தைச் சந்தேகிக்கக் கூடும். "அந்தோ! நான் நல்லது செய்யக் கருதி தீமையாக முடிகின்றதே" என்று எண்ணிய வேந்தன், அந்தணர் ஐயுருதிருக்கும் பொருட்டு அத்தெரு முழுவதும் கதவைத் தட்டிவிட்டுச சென்ருன்!

மறு நாள் காலை அந்தணர்கள் அரசவைக்குச் சென்று, 'இரவில் ஒரு கள்ளன் வந்து எங்கள் கதவுகளைத் தட்டி இடர்ப்படுத்தினன்' என்ருர்கள்.

**தண்டனை**

மன்னன் நீதிபதியை அழைத்து 'ஏககாலத்தில் இத்துணை வீடுகளின் கதவுகளைத் தட்டிய கள்ள னுக்கு என்ன தண்டனை தரவேண்டும்?' என்று வின வினார்.

'கள்ளனைக் கண்டுபிடித்துத் தோள்மட்டில் கரந் தனைத் துண்டிக்க வேண்டும்' என்றார் நீதிபதி.

**பொற்கைப் பாண்டியன்**

அரசன் நடந்தவற்றை விரித்துக் கூறி, உடனே உடைவாளெடுத்துத் தன் கையை வெட்டிக்கொண் டான்.

எல்லோரும் இதனைக் கண்டு கண்ணீர் சிந்திக் கதறினார்கள்; புலம்பினார்கள்; மன்னவனுடைய நீதியை எண்ணி அதிசயித்தார்கள். பின்னர் பொன் னால் கைபோல் செய்து பொருத்தினார்கள்; அதனால் அவனுக்குப் 'பொற்கைப் பாணடியன்' என்ற பெயர் உண்டாயிற்று.

இந்த வரலாற்றை வைத்துக் கம்பர் அந்தப் பாடலைப் பாடினார். அப்பாடல் இதோ வருகின்றது; என்ன அருமையான தமிழ்! இக்கவியில் தொடை யழகும், நடையழகும், சொற்சுவையும், பொருட் சுவையும் ஒருங்கே அமைந்துள்ளன.

> கொற்கையான் மாறன் குலசேகரப் பெருமான்
> பொற்கையான் ஆனகதை போதாதோ—நற்கமல
> மன்றலே வாரிமணி வாசலை அசைக்கத்
> தென்றலே ஏன்வந்தாய் செப்பு?

# 9. இருவர்

தமிழ்ப் புலவர்கட்கு அளவில்லாத சிறப்புண்டு. அவர்கள் அரும்பெரும் குணங்களை யுடையவர்களாக வாழ்ந்தார்கள்; கவியரசரைப் புவியரசரும் போற்றி செய்தார்கள்.

புலவர்களால் பாடப்பெறுவதைத் தமது பெற லரும் பேருக மக்கள் கருதினார்கள். தக்க புலவர் களால் பாடப்பெற்றவர்கள் அழியாத புகழுடம்பைப் பெற்று வாழ்வார்கள். இமயம் உள்ளவரை அவர்க ளுடைய பெருமை குன்றாது.

### மதுரை நகர்

மதுரை மாநகரம் தமிழ் நாட்டின் தலைநகரம்; சங்கம் இருந்த தண்டமிழ்ப்பதி; அங்கயற் கண்ணம்மை அவதரித்த அரிய திருத்தலம். அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் புரிந்து அரனார் அமர்ந்து அருள் புரிந்த புண்ணியபுரி. அத்தலத்திலே யுள்ளசிவபெருமானுடையதிருநாமம் சொக்கலிங்கம்.

### அரச வைத்தியர்

இத்தகைய திருத்தலத்திலே ஒரு சிறந்த மருத்து வர் வாழ்ந்தார். அவர் கைராசியுடையவர். அரச வைத்தியர்; உயர்ந்த மருந்துகளைத் தயாரித்து நுணுக்கமாக ஆய்ந்து நோய்களைத் தீர்ப்பதில் வல்லவர்.

"நோய்நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்று திருவள்ளுவர் கூறியபடி நோயையும், நோய் வந்த காரணத்தையும், அதனை நீக்கும் தன்மையையும் நன்கு நுணுகியுணர்ந்து மருந்தைத் தருவார்.

### நற்குண சீலர்

அவரிடத்திலே எளியவர்கள் ஏழைகள் சென்று அணுக முடியாது. மன்னர்க்கும், மன்னரையொத்த செல்வர்க்குமே அவர் வைத்தியம் புரிவார். மிகப் பெருத்த செல்வாக்குப் படைத்தவர். அவர் பெயர் சொக்கலிங்கப் பண்டிதர்.

இவர் நற்குண சீலர். தூய உள்ளம் உடையவர். ஏற்றமும் தோற்றமும் படைத்தவர். பாண்டிய மன்னருடன் பழகிச் சிறந்த ஆடை அணிகளுடன் விளங்கினார்; இவருடைய தந்தை வீரபத்திரர்.

### புலவர் மருதனார்

இவர் காலத்தில் மதுரையில் ஒரு பெரும் புலவர் இருந்தார். அவர் பெயர் மருதனார். இவர் சிறந்த பண்பாடும் தமிழ்ப் புலமையும் உடையவர். அரசர்களால் மதிக்கப் பெற்றவர். இவருடைய புகழ் எண் திசைகளிலும் பரவியிருந்தது. அக்காலத்தில் அவருடைய திருவாக்கினால் பாடல் பெறுவதைத் தமது பெரும் பேருகத் தக்கார் கருதினார்கள்.

சொக்கலிங்கம் என்ற மருத்துவர், மருதனாரிடம் ஒரு பாடல் பெறவேண்டும் என்று நெடுநாட்களாக

அவாவினுர். அதற்கு என்ன வழி என்று யோசித்தார்.

### நோயால் வாடிய மருதனுர்

மருதனுர் ஒரு சமயம் கொடிய நோயினுல் பீடிக்கப்பட்டார். மெலிந்துவிட்டார். எத்தனையோ மருத்துவர்கள் பார்த்தும் பலப்பல மருந்துகள் தந்தும் நோய் தீரவில்லை. எல்லோரும் கைநழுவவிட்டார்கள். பிழைக்கமாட்டார் என்று கருதினுர்கள். அந்தோ! இவர் மறைந்தால் தமிழுலகுக்கே பெரிய நஷ்டம். தமிழறிவின் கருவூலமாகிய இவர் வாழ்ந்தால் உலகில் தமிழும் தமிழ்ப் பண்பாடும் வாழுமே என்று கூறி மக்கள் இரங்கினுர்கள். தமிழ்ப்பெரும் புலவர் நிலை குறித்து வருந்தினுர்கள்.

### ஏங்கிய புலவர்

மருதனுர், மாபெரும் சிறப்புடைய மருத்துவர் சொக்கலிங்க பண்டிதரிடம் தனது உடம்பைக்காட்டி மருந்து உண்டால் ஒரு வேளை நலமாகக்கூடும் என்று எண்ணினுர் ஆனுல் அவரோ அரச வைத்தியர். எளியனுகிய எனக்கு அவர் மருத்துவம் புரியமாட்டாரே; இதற்கு என்ன செய்வோம்? அவர் பெரும் பொருள் கேட்பாரே, என்னிடம் ஒரு சல்லியும் கிடையாதே. சொக்கேசர்தான் இதற்குத் துணைபுரிய வேண்டும் என்று எண்ணினுர்.

மருதனுருடைய நலத்தில் கருத்துடைய ஒரு நண்பர் சொக்கலிங்கப் பண்டிதரிடஞ் சென்ருர். “ஐயா! வணக்கம்; நமது மதுரையம்பதியில் பெரும்

புலவராகிய மருதனுர் என்பவர் பிணி வாய்ப்பட்டு பெரும் துயரம் உறுகின்ருர். அவர் வாழ்ந்தால் தமிழ் வாழும். அவருக்குச் செய்யும் உதவி தமிழ்த் தாய்க் குச் செய்தது. தாங்கள் தயவு செய்து அவரைப் பார்த்து மருத்துவம் புரியுமாறு வேண்டுகின்றேன்" என்ருர்.

புலவரிடம் பாடல் பெற வேண்டுமென்று நெடுங் காலமாகக் கருதியிருந்த மருத்துவர், உடனே மருந் துப் பெட்டியை எடுத்துக்கொண்டு வலிய மருதனுர் இருக்குமிடம் போனுர். நோயில் கிடந்து துள்ளித் துடித்துக்கொண்டு பாயில் கிடந்தார் மருதனுர்.

## புலவரின் வியப்பு

அவருக்குத் தன் கண்களை நம்ப முடியவில்லை. அரசருடைய அரண்மனைக்குச் செல்லும் அருமை பெருமை நிறைந்த சொக்கலிங்கரா நம்முடைய வீட்டுக்கு வந்தார்? நான் அழைக்கவும் இல்லையே! ஏதோ தெய்வ கருணைபோலும் எனக் கருதினுர்!

படுத்த வண்ணமே கரங்களைக் கூப்பிக் கும்பிட் டார். சொக்கலிங்கப் பண்டிதர் அவர் உடலைச் சோதித்தார். நாடிகளைப் பார்த்தார். நோயின் நுட் பத்தை யுணர்ந்தார். சிறந்த மருந்துகளைத் தந்தார். படிப்படியே நோய் நீங்கியது. உடல் நலமுற்றது. முற்றிலும் நன்மையுற்ருர். மருத்துவருக்குப் பணம்தர அவரால் இயலவில்லை. என் செய்வார்? உடனே தன்னைக் காத்தருளிய மருத்துவர் மீது ஒரு நேரிசை வெண்பா பாடினுர். அதனை எழுதிய ஏட்டை வெற் றிலை, பாக்கு, பழம், கற்கண்டு நிறைந்த தட்டில்

வைத்தார்; மருத்துவரிடம் தந்து தனது நன்றியறிவைத் தெரிவித்தார்.

மருத்துவரின் மகிழ்ச்சி

அப்பாடல் இதன்கீழ் உள்ளது.

மிக்க மதுரைச் சிவனும் வீரபத்தி ரன்சுதனும்
சொக்கர் இருவரெனத் தோன்றினர்—அக்கோன்
பிறவாமல் காப்பான் பிறந்தவரை மீண்டும்
இறவாமல் காப்பான் இவன்.

இப்பாடலைப் பெற்ற மருத்துவருக்கு மட்டில்லாத மகிழ்ச்சியுண்டாயிற்று. பதினாயிரம் பவுன் தந்தாலும் அவருக்கு அத்தனை திருப்தி உண்டாகியிராது. அப்பாடலை லட்சம் பவுனைக் காட்டிலும் பெரிதாக மதித்தார்.

மதுரையில் சொக்கலிங்கம் என்று இருவருண்டு. ஒருவர் சிவபெருமான்; மற்றொருவர் வீரபத்திரன் புதல்வராகிய மருத்துவர்.

'முன்னவராகிய சொக்கலிங்கம், தன்னை யடுத்தவரைப் பிறவாமல் காத்தருளுவார்; பின்னவராகிய சொக்கலிங்கம், தன்னை யடுத்தவர்களை இறவாமல் காத்தருளுவார்' என்ற பொருளுடைய பாடலால் அம்மருத்துவரும் இறவாதவராயினர்.

---

# 10. கொதிக்கின்றது

["ஐவேல் அசதிக் கோவை" என்ற நூல் தமிழ் மணமும், கவிநயமும், இனிமையும் மிக்கது. ஒத்த தலைவனும் ஒத்த தலைவியும் உள்ளமும் உணர்வும் ஒன்றி, களவு மணம் மேற்கொண்டு வெளிப்பட்டுச் சென்றுவிட்டனர். மகளைத் தாய் தந்தையர் எங்கும் தேடுகின்றனர். வழியில் ஒரு பாலைவனம். இப் பொல்லாத வனத்தில் எவ்வாறு என் மகள் சென்றனளோ என்று தாய் ஏங்குகின்றனள். முத்தமிழைக் கற்றோரின் பிரிவு போலவும், கல்லாத புலவர் உறவு போலவும், வறுமை கவ்விய இளமை போன்றும் பாலைவனம் கொதிக்கின்றது என்று பரிதவிக்கின்றாள் தாய். இக்கட்டுரையில் தாயின் பரிவு அழகுற விளக்கப் படுகிறது.]

பழங்காலத்திலே தமிழகத்தே களவு மணம் கற்பு மணம் என்ற இருவிதமான மணம் உண்டு. இதனைக் களவியல், கற்பியல் என்று கூறுவர்.

ஒத்த தலைவனும் ஒத்த தலைவியும் பண்டை ஊழ் கூட்ட, அடுப்பாரும் கொடுப்பாரும் இன்றி தன்னந் தனியான இடத்திலே சந்திப்பார்கள் முன்னைப் பிறப் பின் தொடர்பினால் இவர் நமது கணவன் என்று

அவளும்,இவள் நமது மனைவி என்று அவனும் உன்னி உள்ளமும் உணர்வும் ஒன்றி கைதொட்டு, மெய் தொட்டு கூடியின்புறுவர்; இதற்கு தெய்வக் காதல் என்று பெயர். பின்னர் அவர்கள் ஒழுக்கத்தினின்றும் ஒருபோதும் பிழைபடார். இமயம் பெயரினும் பெயரா உறுதியுடையவராக இருப்பர். அவனையன்றி அம் மாதரசி வேறு ஒருவனைக் கனவிலும் நினையாள். அவளையன்றி அந்த ஆட்வன் மற்றொருத்தியை மனத் தாலும் தீண்டமாட்டான்; இத்தகைய நெறிப்பட்ட மணமே களவு மணம்.

### காதலன் மனைவி

இந்த முறையில் ஒரு நாயகனும் நாயகியும்ஒன்று பட்டனர். அப்பெண்மணியின் தன்மையறியாத தாய் தந்தையர் அவளை வேறு ஒருவனுக்கு மணம் பேச லானார்கள். நெறி மாருத அப்பெண்மணி தான் காத லித்த கணவனுடன் வெளிப்பட்டுச் சென்றுவிட்ட னள்.

புதல்வியை நாடித் தேடித் தாயார் சென்றனள். இடையில் ஒரு பாலைவனம் வந்தது. புல்பூண்டில்லாத வனம். உண்ணீரும் தண்ணீரும் இல்லாத கொடிய காடு. அந்த வனம் நெருப்புக் குழம்புபோல் கொதிக் கின்றது; அனல் காற்று வீசுகின்றது. விலங்குகளோ பறவைகளோ சஞ்சரிக்கவில்லை.

### தாயின் பரிவு

இக்கொடிய பாலைவனத்தைத் தாய் கண்டாள்; 'அந்தோ! இப்பொல்லாத வனத்தில் இளமையான என் புதல்வி எவ்வாறு சென்றனளோ? இந்த வெப்

பத்தை அவள் எப்படித் தாங்கிக்கொண்டனளோ' என்று வருந்துகின்ருள்.

உறவும் பிரிவும்

அந்த வனம், வடவைத் தீயைப்போல் கொதிக்கின்றது என்ருே, ஆலகால விடம்போல் கொதிக்கின்றது என்ருே அவள் கூறவில்லை.

வெய்யிலின் வெப்பம், சுடு மணலின் வெப்பம், அனல் காற்றின் வெப்பம், ஆகிய மூன்றுவிதமான வெப்பத்துடன் கூடிய அவ்வனத்தின் கொடுமையை நினைத்து அவள் கூறுவதாக ஔவையார் கூறுகின்ருர்.

அற்ருரைத் தாங்கும் ஐவேல் அசதி அருவரையில்
முற்ரு முகிழ்முலை எங்ஙனஞ் சென்றனள்? முத்தமிழ் நூல்
கற்ருர் பிரிவுங் கல்லார் இணக்கமும் கைப்பொருளொன்
றற்ருர் இளமையும் போலே கொதிக்கும் அருஞ்சுரமே.

"திக்கற்றவர்களைக் காக்கின்ற ஐவேல் என்ற அரசனுடைய ஆட்சிக்குரிய மலைச்சாரலில் இளம் பெண்மணியாகிய என் புதல்வி எவ்வாறு சென்றனளோ? மூன்று தமிழையுங் கற்றவர்பிரிவுபோலவும், கல்லாத புல்லர் உறவு போலவும், வறுமையான இளமைபோலவும், இந்த அரிய பாலைவனம் கொதிக்கின்றது" என்று தாய் கூறி இரங்குகின்ருள்.

வெய்யிலின் வெப்பம் கற்ருர் பிரிவைப் போலவும். சுடுமணலின் வெப்பம் மூடரது உறவு போலவும், அனல் காற்றின் வெப்பம் இளையான் வறுமை போலவும் கொதிக்கின்றது.

அறிஞரது கூட்டுறவு, மிகுந்த இன்பத்தைத் தரும். அவர் பிரிவு பெருந்துயரந் தரும்.

'உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்'

என்கிறார் திருவள்ளுவர்.

### அறிவிலார் நட்பு

இனி அறிவில்லாதவர் நட்பு மிகப் பெரிய கொடுமையைத் தரும்.

கல்லாத ஒருவனை ஒரு தனவந்தன் வழித் துணைக்கு உடன் அழைத்துச் சென்றான். கல்லாத மூடன் அத் தனவந்தனைப் பொருள் கேட்டான். தனவான் மூன்று பணந் தந்தான். மூடன்மடியில் வைத்துக்கொண்டான். இருள் சூழ்ந்துவிட்டது. இனி வழி நடப்பது இடர் என்று கருதி இருவரும் ஓர் ஆவரஞ் செடியின் கீழ் பதுங்கி ஒளிந்து கொண்டார்கள். மூடன் நன்கு உறங்கிவிட்டான். உருண்டு வழியில் கட்டை போல் கிடந்தான்.

### கள்ளரும் மூடனும்

வழியில் வந்த கள்ளர்கள் கட்டையென்று கடந்து சென்றார்கள். ஒருவன் காலால் உதைத்து உருட்டினான். முன்னே சென்ற கள்ளர் தலைவன் "அது கட்டை, அதை ஏன் உருட்டுகின்றாய்?" என்றான்; அந்த மூடன் விழித்து எழுந்தான்; கொதித்துச் சீறினான். "ஏய் என்னைக் கட்டை என்று கூறுகின்றாய்? உன் வீட்டுக் கட்டையின் மடியில் மூன்று பணம் இருக்குமா?" என்றான்.

கள்ளர் தலைவன் அவன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்து, மடியில் இருந்த பணத்தை எடுத்து இருட்டில் கையால் தடவிப் பார்த்தான்.

மூடன் 'என்னையா! செல்லுமா? செல்லாதா என்று பார்க்கின்றீரா? செல்லும் செல்லாததற்குச் செடி மறைவில் உள்ள செட்டியாரைக் கேள்' என்றான்.

கள்ளர்கள் செடியில் மறைந்திருந்த தனவந்தனை அடித்துப் பொருள் அனைத்தையும் பறித்துக்கொண்டார்கள். எனவே கல்லார் இணக்கம் பெருந் துயரத்தைத் தரும்.

மூன்றாவது இளமையில் வறுமை, அதிக அல்லலை நல்கும்.

ஒளவையார் கூறுகின்றார்:

'கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினும் கொடிது இளமையில் வறுமை'

ஆகவே "இந்த அருஞ்சுரம் (சுரம்-பாலைவனம்) கற்றார் பிரிவைப்போலும், கல்லார் நட்பைப்போலும், வறியவன் இளமையைப்போலும் கொதிக்கின்றது" என்று அந்த அன்னை கூறினாள்.

இப்பாடல் ஐவேல் அசதிக் கோவையில் உள்ளது; இதனைப் பாடியவர் ஒளவையார்.

———

# 11. "உலகம் பெறுதல் வேண்டுவனே"

[திருவருட்பிரகாச வள்ளலார் திருவருளை நாடி வாடினர்; வருந்தினர். ஒரு நாளிரவு "சித்திவளாகம்" என்ற குடிசையில் அடிகளார் உறங்காது இரங்கினர்; அழுதார். அம்பலத்தாடும் எம்பெருமான் காட்சியளித்தார். அடிகளாரின் உடலில் அருள் மின்சாரத்தைப் பாய்ச்சினர். வள்ளலாரின் உள்ளத்தில் பரிபூரண இன்பம் பொங்கித் ததும்பியது. எனினும் வள்ளலார், முன்னையினும் பன்மடங்கு துன்பமுற்றழுதார். "ஏன் அழுகின்ருய்" என்று ஆண்டவன் வினவினர். "நான் பெற்ற இன்பத்தை, என்போல். இவ்வுலகம் பெற வேண்டாமா என்று அழுகின்றேன்" என்ருர் வள்ளலார். இந்த அமுதத் தமிழ்க் கட்டுரையில், வள்ளலார் கண்ட அருளின்பத்தை வடித்துக் காட்டும் சிறப்பு சிந்தைக்கு விருந்தாய் அமைந்துள்ளது.

பொறுக்க முடியாத வெப்பம் விளைகின்றபோது வானில் மேகந் தோன்றி மழை பொழிகின்றது. அது போல் மிகுந்த அநீதிகள் பொங்கி மக்கள் தடுமாறு

கின்ற காலத்திலே ஞான வானத்தில் கருணை முகில் தோன்றி அருள் மழை பொழிந்து, ஆவி சாவியாகா வண்ணம் உயிராகிய பயிரைக் காப்பாற்றும்.

**அருட்பா**

இந்த முறையில் 19-ம் நூற்றுண்டில் ஜாதிவெறி சமயவெறி முதலிய பற்பல வெறிகள் மிகுந்து மக்கள் பூசலிட்டு நிலை குலைந்து நின்றபோது, அருட்பிரகாச வள்ளலார் தோன்றி திருவருட்பா என்ற தண்டமிழ் மழையைப் பொழிந்து உலகுயிர்களை உய்வித்தனர்.

**வள்ளலார் வாட்டம்**

வள்ளலார் சென்னையில் வாழ்ந்தால் தனது தவ நிலை குலையும் என்று கருதிச் சிதம்பரம் வந்தார். இன்னும் சிறிது ஒதுங்கி வாழக் கருதி வடலூராகிய பெருவெளியை யடைந்தார். அங்கும் மக்கள் கூடி அவரை இடர்ப்படுத்தினுர்கள். அங்கிருந்து மேட்டுக்குப்பத்திற்குச் சென்றுர். திருவருளை நாடிகாட்டிலும் மேட்டிலும் அலைந்தார். அவர் பட்டபாடு பஞ்சுகூடப்படாது; அத்துணை வருத்தமுற்றுர்; அருள் தாகங் கொண்டு அலைந்தார்; உலைந்தார்; மேனி குலைந்தார்.

'தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்
சிறுகுறும் என்றுளம் பயந்தே
காட்டிலே சிறிய ஊர்ப்புறங்களிலே
நண்ணினேன்'

சுவாமிகள் தான் பட்ட பாட்டையும் அடைந்த அல்லலையும் கூறுகின்றனர். ஆ! அதனை நினைந்தால் கல்லுங் கரையுமே.

நான்படும் பாடு சிவனே உலகர் நவிலும் பஞ்சு
தான்படுமோ? சொல்லத் தான்படுமோ?
எண்ணத்தான் படுமோ
கான்படு கண்ணியின் மான்படுமாறு கலங்கி நின்றேன்
ஏன்படு கின்றனை என்றிரங் காயென்னில் என்செய்வனே.

உறங்காது இரங்கல்

இவ்வாறு திருவருளை நாடி அடிகளார் வாடினார்; வருந்தினார். அப்பன் அருள் எங்கே? எப்பொழுது கிடைக்கும்? அந்தோ! நாள் ஒவ்வொன்றாய் கழிகின்றதே? என் செய்வேன்?" என்று ஏங்கினார்; அழுதார்; தொழுதார்; அலறினார்; உலரினார்.

இப்படி ஒரு நாளன்று; இரு நாளன்று; பலநாள் பரதவித்தார். ஒருநாள் இரவு, நடுயாமம். எங்கும் நிசப்தம். பித்தரும் பத்தரும் முத்தரும் உறங்குகின்ற அமைதி குடிகொண்டுள்ள நேரம்.

"நித்த நியமத் தொழிலராய் நிறையுஞானத்
துத்தமர் உறங்கினர்கள் யோகியர் துயின்றார்
மத்தமத வெங்களி றுறங்கின மயங்கும்
பித்தரும் உறங்கினர் இனிப்பிறரி தென்னும்"

என்று கம்பநாடர் கூறியவாறு சராசரங்கள் யாவும் அமைதியாக உறங்குகின்றன.

அந்த நள்ளிரவில் மேட்டுக்குப்பத்தில் சித்தி வளாகம் என்ற குடிசையில் இராமலிங்க அடிகளார் மட்டும் உறங்காது இரங்கினார்.

## அம்பலத்தாடும் அருளரசே

"அம்பலத்தில் ஆடுகின்ற எம்பெருமானே! சிறி யேன் படுகின்ற வேதனையைத் தேவரீர் அறிந்தி லீரோ? எங்கும் நிறைந்த இறைவனே! கொசு பறக் கின்ற ஓசையும் உன் காதில் விழுமே! எனக்கு என் றும் தாயும் தந்தையும் நீதானே? மகனாகிய என்னை இப்படித் தவிக்கவிடலாமா? இது நின் கருணைக்கு அழகா? அப்பனே அருட்கடலே! ஆனந்தக் கூத் தனே! கருணாநிதியே! கவலைக் கடல் கடத்தும் அருள் தோணியே! மனத் தளர்ச்சிக்கு ஆணியே! இனி என்னால் இத் துன்பம் பட முடியாது; ப்ரம கருணைத் தெய்வமே" என்று துதித்தார்.

இவ்வண்ணம் உள்ளங் கனிந்து அழுதுதொழுது அங்ஙனமே மண்மேல் வீழ்ந்து மூர்ச்சித்துவிட்டார்.

## ஈசனைக் கண்டார்

கனக சபையில் அநவரதமும் ஆனந்தத் தாண்ட வம் புரியும் ஆண்டவர் அருள்வடிவங் கொண்டு வந் தார். உள்ளம் உணர்வு உரை முதலிய எல்லாம் ஒடுங்கி அவசமுற்றிருக்கின்ற வள்ளலாரை எம்பெரு மான் தனது தாமரைத் தடங்கரங்களால் எடுத்தார். முகத்தைத் துடைத்தார்.

வள்ளலார் கண் விழித்துப் பார்த்தார். ஒளிமய மான ஈசனைக் கண்டார்; களிகொண்டார். "ஆ! ஆ! ஆண்டவனே! எளியேனையும் ஒருபொருளாக எண்ணி இப் பாதி ராத்திரியில் வந்தீரே? பரங்கருணைத்

தடங்கடலே! அப்பனே! அருள்பெருது அல்லல் பட்டுத் தவிக்கின்றேன். தயாநிதியே! ஐயனே! உய்யுமாறு அருள்" என்று தொழுதார்.

## அருட் பெருஞ்ஜோதி

உடனே மின்னல்போல் ஓர் ஒளியை உண்டாக்கினுர்;அந்த ஒளியே தானேயானுர்.அவ்வொளியான அருட்பெருஞ்சோதி வள்ளலார் கண்வழி நுழைந்தார். அவருடைய உடம்பில் புகுந்தார். ஊன், உள்ளம் உணர்வு உயிர் இவைகளில் கலந்து விட்டார். அந்த அருள் மின்சாரம் பாய்ந்ததும் வள்ளலாருக்கு உண்டாகிய இன்பத்துக்கு எல்லேயே கிடையாது. ஊன் குளிர்ந்தது; உள்ளம் குளிர்ந்தது; உணர்வு குளிர்ந்தது; உயிர் குளிர்ந்தது. ஆ! ஆ! சொல்ல முடியாத ஆனந்தம்; பரிபூரண இன்ப வெள்ளம் பொங்கித் ததும்பி வழிந்தது.

## உலகம் பெறுதல் வேண்டும்

பின்னர் அடிகளார், முன்னேயினும் பன்மடங்கு மீறிய துன்பமுற்று அழுதார். "ஐயனே! ஐயனே" என்று அலறினுர். எம்பெருமான் இப்போது அவருடையஉள்ளுக்குள் நின்று"மகனே!இப்போது நீயும் நானும் ஒன்றுபட்டுக் கலந்து நிற்கின்ருேமே! அருளாரமுதை அள்ளி வழங்கினேனே; இந்தப் பேரின்ப நிலேயை வழங்கிய பின், ஏன் அழுகின்ருய்?" என்று வினவினுர்.

கருணை வடிவு

அடிகளார் "ஆண்டவனே! அருளாரமுதம் எளியேனுக்குக் கிடைக்கவில்லையேஎன்று முன்னே துன்பமுற்றேன். உமது பேரருளைப் பெற்றபின், முன்னிலும் அதிகம் மனம் துன்புறுகின்றது. இத்தகைய இன்பம் மற்ற உயிர்களுக்குக் கிடைக்கவில்லையே? ஆன்மாக்கள் அவமே திரிந்து அலைந்து கெடுகின்றனவே. அந்தோ! இந்த இன்பம் என்போல் எல்லோரும் பெறவேண்டாவோ? பெருமானே! முந்தி என் பொருட்டு அழுதேன். இப்போது உலக உயிர்கள் எல்லோருக்காகவும் அழுகின்றேன்" என்றார். அவருடைய கருணைதான் என்னே? அப்போது அவர் பாடிய அமுதப் பாடல் இதோ:

பாதி இரவில் எழுந்தருளிப் பாவியேனை எழுப்பி அருட்
சோதி யளித்தென் உள்ளகத்தே சூழ்ந்து கலந்து
துலங்குகின்றாய்
நீதி நடஞ்செய் பேரின்ப நிதிநான் பெற்ற நெடும்பேற்றை
ஓதிமுடியாதென்போல் இவ்வுலகம் பெறுதல் வேண்டுவனே.

# 12. நல்லோர்

(நல்லோர்கள், தமக்குப் புல்லர்கள் தீங்கு செய்யினும் அவர்மீது சினங் கொள்ளார்; அவர்களது அறியாமையைக் கண்டிரங்குவர். முனிவிலும் நல்லோர் அருள்புரிவர்; இன்னு செய்தார்க்கும் இனியவே செய்வர். இவ் வினிய கருத்தை, இராமாயணத்தில் விபீடணனுக்கு அடைக்கலம் தரும் இடத்தில் இராமர் வாக்கில் வைத்துக் கூறுகின்ருர் கம்பர். இச்செந்தமிழ் கட்டுரை, அவ் வினிய பாடலின் சுவையை இனிது விளக்குகின்றது.)

நிலத்தினும் கடல் மூன்று மடங்கு பெரிது. கடலுக்கு இடையே உலகம் அழியாமல் இருப்பதற்குக் காரணம் நல்லோர்கள் வாழ்வதேயாகும்.

மழை பொழிவதும் நல்லோர் பொருட்டென உணர்க. 'நல்லார் ஒருவர் உளரேல், அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்று ஔவைப் பிராட்டியார் அருளிச் செய்கின்ருர்.

நல்லோர்கள் புல்லர்கள் தீங்கு புரியினும் அவர் மீது சினங்கொள்ளார். அறியாமையால் இவர்கள் இங்ஙனம் புரிகின்றனர் என்று கருதி புல்லர்களது அறியாமைக்குப் பெரிதும் இரங்குவர். அந்தோ!

இவர்கள் புல்லறிவு நீங்கி நல்லறிவு பெறட்டும் என்று அவர் பொருட்டு இறைவனை வேண்டுவர் நல்லோர்.

### முனிவிலும் அருள்வர்

இனி முனிவிலும் நல்லோர் அருள்புரிவர். புல்லர்கள் உள்ளங்கனிந்து மகிழ்ச்சியுற்ருலும் ஒரு சிறிதும் உதவி புரிய மாட்டார்கள்.

வாழை காயாக இருப்பினும் வெட்டினவர்க்குப் பயன்படும். பழுத்தால்தான் பயன்படும் என்பது வாழைக்கில்லை. பூவும் பிஞ்சும் காயும் கனியும் இலையும் தண்டும் மட்டையும் எல்லாமே மக்களுக்குப் பயன்படுகின்றன.

எட்டி மரம் பழுத்தாலும் மக்களுக்குப் பயன் படுவதில்லை. இதனைச் சிவப்பிரகாச அடிகளார் கூறுகின்ருர்.

> முனிவிலும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
> கனிவிலும் நல்கார் கயவர்—நனிவிளைவில்
> காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்
> தாயினும் ஆமோ அறை.

### வழுவிலார்

நல்லோர்கள் எத்துணைத் துன்பமுறினும் அறநெறியினின்றும் வழுவார். செய்யத் தகாதவற்றைச்

செய்யார். சொல்லத் தகாதன சொல்லார். நினைக்க ஒண்ணுதவற்றை நினையார். புலி பெரும்பசி யுற்ருலும் புல்லைத் தின்ஞதல்லவா? இதுதான் நல்லோர்களின் பெருந்தன்மை. நல்லார் நல்லவற்றினின்றும் ஒரு போதும் வழுவார்.

நல்லாற் ருெழுக்கின் தலைநின்ருர் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியேற்றுப் பசித்தும் தின்ஞவாம்
பைங்கட் புனத்த பைங்கூழ்,

இனி நல்லோர்கள் எத்துணைத் துன்பம் நேரினும் தங்களது தகுதியினின்றும் குறைவுபடார். சந்தனம், அரைத்தாலும் மணக்கும்; அகில் புகைத்தாலும் கமழும். சங்கு சுட்டாலும் வெண்மையாகவே யிருக்கும்.

'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்'

என்கிருர் ஒளவையார்.

மேலும் நல்லோர் தமக்குத் தீங்கு இழைத்தோர்க்கும் நன்மையே புரிவர்.

இதுதான் மேன்மக்களின் சிறந்த இயல்பு.

"இன்ஞ செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

என்பது திருவள்ளுவரது திருமொழி.

### பாண்டவரின் தவநெறி

ஒரு சமயம் பாண்டவர்கள் வனத்தில் வசித்துக் கொண்டிருந்தார்கள். இன்பத்தின் சிகரத்தில் இருந்த அவர்கள் துன்பத்தின் சிகரத்தில் நின்றார்கள். காற்று, மழை, வெயில், பனி, பசி, தாகம் முதலிய துன்பங்களைத் தாங்கிக்கொண்டு, தங்களின் மனநிலை பிறழாதும் தவநெறி தவறாதும் வாழ்ந்தார்கள்.

இவர்களை ஆடைகளாலும் அணிகலன்களாலும் பிற உயர்வுகளாலும் அவமானம் புரியக் கருதினார்கள் துரியோதனாதிகள். பசுக்களை விலங்குகள் கொல்லுவதாகவும், அப் பசுக்களைக் காப்பாற்றப் போவதாகவும் திருதராஷ்டிரனிடம் கூறி விடைபெற்று துரியோதனாதிகள் புறப்பட்டார்கள். 'நெய்கிறவனுக்கு குரங்குக் குட்டி எதற்கு' என்பது ஒரு பழமொழி. அதுபோல வேட்டையாடுகின்ற இவர்களுக்கு மனைவியரை அழைத்துப்போவது எதற்கு? அவர்கள் நோக்கம் பாண்டவர்களை அவமானம் புரிவதுவேயாகும்?

### துரியோதனக் கும்பல்

ஆதலால் துரியோதனன், துச்சாதனன், கர்ணன், சகுனி முதலிய கொடியவர்கள் தங்கள் மனைவிகளை விலையுயர்ந்த ஆடைகளாலும் அணிகலன்களாலும் அலங்கரிக்கச் செய்து, நறுமணம் பூசி நன்மலர் முடித்து தேவகுமாரிகளுடன் தேவகுமாரர்கள் வந்ததுபோல் வந்து பாண்டவர்கள்முன் பற்றி உலாவினார்கள். தருமர் முதலியோரும், திரௌபதியும்

அவர்களைக் கண்டுங் காணுதவர்களைப்போல் இருந்து தங்கள் தவநெறியில் நின்றுர்கள். எவ்விதமான மாறுபாட்டையும் அடையவில்லை. அவர்களுடைய ஏற்றத்தையும் தோற்றத்தையும் கண்டு பொருமையோ கோபமோ வருத்தமோ அடையவில்லை.

### சித்திரசேனன்

குபேரனுடைய சேனைத் தலைவன் சித்திரசேனன் என்பான் அங்கு வர அவனுடன் துரியோதனுதிகள் எதிர்த்தார்கள். சித்திரசேனன் துரியோதனன் முதலியோர்களை வென்று ஆண்களையும் பெண்களையும் இருவர் இருவராக எப்படி எப்படி அமைந்ததோ அந்த வண்ணம் பிணைத்து ஆடுமாடுகளை ஓட்டுவது போல் ஓட்டிக்கொண்டு சென்றனன்.

### தருமர் சபதம்

இதனையறிந்த தருமர் பெரிதும்மனம் வருந்தினுர். கண்ணீர் சிந்தினுர். துரியோதனன் முதலியோர் சிறை மீளும் வரை தண்ணீரும் அருந்தமாட்டேன் என்று சபதம் செய்துகொண்டார்.

துரியோதனுதியரைச் சித்திரசேனனிடமிருந்து சிறைமீட்டு வருமாறு வீமனையும் அருச்சுனனையும் அனுப்பியருளினுர்.

வீமார்ச்சுனர் சென்று சித்திரசேனனை வென்று துரியோதனுதியரை மீட்டு வந்தனர்.

**உபசரிப்பு**

தம்மை அவமதிக்க வந்த மிகக் கொடியவர்களாகிய துரியோதனன் முதலியோரைத் தருமர் வரவேற்று, இன்னுரை பகர்ந்தார்; அறவுரை கூறினுர். சிதைந்த ஆடைகளை அகற்றுமாறு செய்து, ஆண்களுக்கும் பெண்களுக்கும் முன் குபேரன் தமக்களித்த விலமதிக்க முடியாத ஆடையாபரணங்களை வழங்கினுர். இனிது உபசரித்து ஊருக்கு அனுப்பிவைத்தார்.

தங்களை அவமானம் புரிய வந்த துரியோதனுதியரைச் சித்திரசேனனிடமிருந்து சிறை மீட்டு ஆடையும் அணிகலன்களும் வழங்கி நல்லுரை நவின்று உபசரித்தார் தருமர்.

ஆகவே நல்லோர் தமக்கு இடர் விளைவிப்பார்க்கும் இனிமையே புரிவர்.

**இராமர் வாக்கு**

இந்த இனிய கருத்தைக் கவிச்சக்ரவர்த்தியாகிய கம்ப நாடர் தாம் பாடிய இராமாயணத்தில் விபீடணனுக்கு அடைக்கலந்தரும் இடத்தில் இராமர் வாக்கில் வைத்துக் கூறுகின்ருர் மிகஅழகான வாக்கு.

தேவர்கள் இனிய பாற் கடலில் மந்தரமலையை விடுத்து இடையருது கடலைக் கலக்கித் துன்புறுத்திஞர்கள். துன்புறுத்திய அமரர் இன்புறப் பாற்கடல் அமிர்தத்தையே தந்தது.

அதுபோல், நல்லோர்கள் தமக்குத் தீமை புரிந் தோர்க்கும் நன்மையே புரிவார்கள். இக்கருத்தை யுடைய இனிய பாடல் இதோ வருகின்றது. இலக்கி யங்களில் இத்தகைய அறநெறிகளை விளக்கும் அரிய பாடல்கள் பல உள. அவற்றைப் படித்துச் சுவைத் துத் தமிழ் மக்கள் நலம்பெற வேண்டும்.

தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்ய சிந்தைப்
பேரருளாளர் தத்தஞ் செய்கையில் பிழைப்ப துண்டோ
கார்வரை நிறுவித் தன்னைக் கனலெழக்கலக்கக் கண்டும்
ஆர்கலி அமர ருய்ய அமுது பண்டளித்த தன்றே!



# 13. ஊடல்

(காமத்துக்கின்பம் ஊடல்; அதனினும் இன்பம், ஊடிய பின் கூடல்; கணவன் மீது மனைவி ஊடுவதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றைக் காவியங்களிலே ஆங்காங்கு கண்டு இன்புறலாம். திருவள்ளுவர் தமது தெய்வ நூலில் "ஊடல் உவகை" என்றே ஓர் அதிகாரம் வைத்தார். கம்பர் வாக்கிலிருந்து ஒரு பாடலை எடுத்துக் காட்டி ஊடலின்பச் சுவையை, இனிய தமிழில் அழகுற விளக்குகின்றது இக்கட்டுரை.)

தமிழ்க் காவியங்களிலே பலப்பல சுவைகள் உண்டு. அவற்றுள் ஊடலைப்பற்றிச் சொல்லுஞ் சுவையும் ஒன்று.

தலைவனும் தலைவியும், ஊடுவது கூடுவதற்கு இன்பம். கூடல் இன்பத்தை மிகுதிப்படுத்துவது ஊடல்.

## ஊடல் இனிது

ஒரு மனிதன் அறப்பசித்து உண்பானுயின் உணவின் சுவை அதிகமாக இருக்கும். அதுபோல் ஊடிக் கூடுவதனுல் இன்பம் மிகுதிப்படும்.

> உணலினும் உண்ட தறலினிது; காமம்
> புணர்தலின் ஊடல் இனிது.

சிறிது நேரம் வெய்யிலில் இருந்துவிட்டு இனிய நிழலுக்குச் சென்றால் நிழல் மிகுந்த இன்பத்தைப் பயக்கும்.

எனவே ஊடல் உவகை என்றே ஓர் அதிகாரம் வைத்தனர் திருவள்ளுவர். அதனையும் புலவி நுணுக்கம் என்ற அதிகாரத்தையும் படித்து இன்புற வேண்டும். அந்த வகையில் இரண்டொன்றைச் சிந்திப்போம்.

தும்மினான்

ஒரு கணவன் மாலை நேரத்தில் மகிழ்ச்சியாக அமர்ந்திருந்தான்; அவனுடைய அருமை மனைவி அருகில் நின்றிருந்தாள். கணவன் தும்மினான். அருகிலுள்ள பெரியவர்கள் தும்மினால், இறைவனைத் துதித்து 'நூறாண்டு வாழ்க' என்று வாழ்த்துவதும், வயதில் சிறியவர்கள் தும்மினால் அருகில் உள்ள பெரியவர்கள் 'நூறாண்டு' என்று வாழ்த்துவதும் தமிழர் மரபு.

அழுதாள்

அந்த முறையில் கணவன் தும்மியவுடன் அருகில் நின்ற மனைவி தன் கணவனுக்கு 'நூறாண்டு உண்டாக' என்று பரம்பொருளைத் துதித்தாள். பின்னர் அவள் மாறுபட்டு விம்மியழத் தொடங்கினாள். கணவன் மனைவியை நோக்கி, 'பெண்மணி! ஏன் அழுகின்றாய்?' என்று வினவினான்.

'அன்புடையீர்! யாராவது அன்புடையவர்கள் நினைத்தால்தானே தும்மல் வரும்? தங்களை நினைக்க நான் அருகில் இருக்க இப்போது வேறு யார் நினைக்கத் தும்மினீர்? உம்மை நினைந்து வருந்துகின்ற மகளிரும் வேறு உளரோ?' என்று கூறி அழுதாள்.

> வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
> யாருள்ளித் தும்மினீர் என்று.

### ஆறுதல் கூறல்

பின்னர் கணவன் மனைவியை நோக்கி, 'அன்புடையவளே! வீணாக ஐயுறவேண்டா. உன்னையன்றி எனக்கு உறவு யாருளர்! ஆகவே, என் தும்மலுக்குக் காரணம் பிறருடைய நினைவு அன்று; சத்தியமாகக் கூறுகின்றேன்' என்று கூறி ஆறுதல் புரிந்தான்.

### மீண்டும் ஊடல்

சிறிது நேரம் சென்ற பின் கணவனுக்கு மறுபடியும் தும்மல் வந்தது. முன்னர் தும்மியதால் இவள் ஐயுற்றனளே என்று கருதிய கணவன் தும்மலையடக்கி மறைத்தான்.

மனைவி மீளவும் பிணங்கினாள். "இப்போது தங்கள் கரவுத்தனம் நன்கு விளங்குகின்றது. உள்ளபடியே இயற்கையாய்த் தும்மல் வருமாயின் அதனை ஏன் அடக்கவேணும்? இதில் ஏதோ சூது இருப்பதனால்

தானே வந்த தும்மலை மறைக்கின்றீர்'' என்று கூறி அவள் ஊடல் கொண்டனள். இதனை வள்ளுவர் கூறுகின்ற அழகைக் காண்க.

தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ என்று.

இவ்வாறு மனைவி ஊடுவதற்குப் பல காரணங்கள் உண்டு. காவியங்களில் ஆங்காங்கு இவைகளைக் காணலாம்.

### மாதரசியின் சீற்றம்

கம்பராமாயணத்தில் ஓர் இடத்தை இங்கு நினைவு கூர்வாம். தயரத மன்னர் ஸ்ரீராமருடைய திருமணத்தின் பொருட்டுப் பரிவாரங்கள் சூழ மிதிலாபுரிக்குச் சென்றுகொண்டிருந்தார்.

வழியில் எத்தனை எத்தனையோ அரிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன; அவற்றுள் ஒன்று.

ஒரு வீரன்; போர் என்ற சொல்லைக் கேட்டவுடன் அவனுடைய தோள்கள் வீரவுணர்ச்சியில் விம்மும்; மலைபோன்ற, திரண்டு உருண்டு புடைத்து நின்ற தோள்களை உடையவன்; அத் தோள்களில் வீரம் குடியிருந்தது; அழகும் குடியிருந்தது. அன்றியும் அவன் மன்மதனும் நாணுகின்ற எழிலையுடைய

வன். அவ்வீரன் தன் மனைவியின் கூந்தலில் சூட்டி அணி செய்யும்பொருட்டு மலர் கொய்திருந்தான்.

### பிணங்கினுள்

அவனுடைய மனைவி மிக்க வனப்புடையவள். குயில் போன்ற இனிய குரலை யுடையவள்; கரிய குழலும் அரிய குணமும் படைத்தவள்; அவள் மெல்ல மெல்ல அடிமேல் அடிவைத்துப் பின்புறமாக வந்து கணவருடைய கண்களை மூடினுள். அவ்வீர குமாரன், தன் கண்களை மூடியது 'யார்' என்று கேட்டான்.

அவ்வளவுதான் அவளுக்குத் தன் கணவன் மீது சீற்றமும் சந்தேகமும் உண்டாயின. கையை எடுத்து ஒரு புறமாகப் பிணங்கித் திரும்பி நின்ருள். உலைக் களத்துத் துருத்தியின் காற்றுப்போல் அனல் மயமாகப் பெருமூச்சு விட்டாள்.

இதனைக்கண்ட கணவன் பெரும் கலக்கமுற்ருன். "கண்ணே! ஏன் இந்தக் கோபம்? நாகப்பாம்பு சீறி உயிர்ப்பதுபோல் உயிர்க்கின்றனையே! உன் சீற்றத் துக்குக் காரணம் யாது?" என்று அன்பாகவும் நயமாகவும் கேட்டனன்.

### ஐயுற்ருள்

அம் மாதரசி கூறுகின்ருள்:—தங்கள் கண்களை மூடும் உரிமை என்னைத் தவிர வேறு யாருக்குண்டு? கண்களை மூடியவுடனே தாங்கள் என் பேரையிட்டுத்

தானே அழைக்கவேண்டும். தங்கள் கண்களை மூடுவதற்கு உரிய மகளிர் பலர் இருப்பார்கள் போலும்! அம்மகளிருள் யார் என்று வினவினீர்? ஆதலால் தங்களிடம் ஒரு மனைவியையே நேசிக்கும் சிறந்த ஒழுக்கம் இல்லை போலும்? ஆதலால் உமது பண்புடைமையில் நான் ஐயுறுகின்றேன்; போதும் போதும், தங்கள் அன்புடைமை; இப்படிப்பட்டவர் என்பதை நான் இப்போது தானே உணர்கின்றேன்'' என்று கூறினாள்; கணவன் மீது சீறினாள்; அன்பு மாறினாள்; பின்னர் அவன் அப்படியொன்றும் நான் பிழையுடையவன் அல்லன் என்று உறுதியுரை உரைத்த பின் சினம் ஆறினாள்; இதனைக் கம்பநாடர் கூறுகின்றார்.

போரென்ன வீங்கும் பொருப்பன்ன
பொலன்கொள் திண்டோள்
மாரன் அனையான் மலர் கொய்திருந்தானை வந்தோர்
காரன்ன கூந்தல் குயிலன்னவள் கண்புதைப்ப
ஆரென்னலோடும் அனலென்ன அயிர்த்துயிர்த்தாள்.



# 14. உண்டேன்

(உலகம் ஆடம்பரத்தில் மயங்குகிறது. உடையின் உயர்வைக் கண்டு மதிக்கின்றது. உள்ளத்தின் உயர்வை உன்னுவதில்லே. தோலாடை உடுத்த சிவபிரானுக்குப் பாற் கடல் ஆலால விடத்தை அளித்தது. ஆனல் பட்டாடை அணிந்த பரந்தாமனுருக்கு, தன் மகள் இலக்குமி தேவியை ஈந்தது. ஔவைப் பிராட்டி எளிய ஆடை யுடுத்திக்கொண்டு பாண்டிய மன்னனது திருமண விழாவிற் குச் சென்றிருந்தார்; அவமதிக்கப்பட்டார்; நெருக்குண்டார்; தள்ளுண்டார்; நீள் பசி யால் சுருக்குண்டார்; சோறு கண்டிலார். இச்செந்தமிழ்ச் சித்திரத்தை, இக்கட்டுரை விளக்குகின்றது.)

## ஔவையார்

ஒரு சொல்லேச் சாமர்த்தியமாகவும், நகைச்சுவை படவும் சொல்வதில் ஔவையார் சமானமில்லாதவர். அவருடைய பாடல் அமிழ்தினும் இனிமையாகத் தித் திக்கும்.

ஔவையார் அக்காலத்தில் கால் நடையாகவே நடந்து பலப்பல அரசர்களேயும், தனவந்தர்களேயும் பார்த்து அவரவர்கட்கு அரிய அறிவுரைகளேக் கூறி நல்வழிப்படுத்தி வந்தார். அவருடைய புகழ் எங்

கெங்கும் பரவியிருந்தது. அவரை மூவேந்தரும் புகழ்ந்தார்கள்; பாராட்டினுர்கள்; மாவேந்தரும் மதித்தார்கள்.

ஔவையாருடைய பாடல்கள் அளவற்ற பெருமையுடையதாகத் திகழ்ந்தன; அவரால் பாடப் பெறுவதைத் தங்கள் பெரும்பேருக எண்ணினுர்கள். அவரை அனைவரும் வரவேற்றுப் புகழ்ந்து உபசரித்தார்கள். எங்கும் அவருககுப் பாராட்டுதலும் சீராட்டுதலும் இருந்தன. அம்மையார் ஆங்காங்கு தாம் கண்ட காட்சிகளை அழகாகவும் சுவையாகவும் பாடுவார்.

**பாண்டியன் மனம்**

ஒரு சமயம் ஔவையார் மதுரையில் பாண்டிய மன்னனுடைய திருமணத்திற்குச் சென்றனர். திருமண விழாவில் அளவிறந்த கூட்டம். வருவாரும் போவாரும் அதிகம்.

ஔவையார் மிகவும் எளிமையாக இருப்பவர். ஆடம்பரத்தை அறவே வெறுத்தவர். எளிமையான உடை உடுத்திருந்த ஔவையாரை, அரண்மனைக் காவலாளர்கள் பிடித்து வெளியே தள்ளிவிட்டார்கள். அங்குள்ளவரும் அவரை இன்னுர் என்று அறிந்தார்கள் இல்லை. உடையால் அவருக்கு உள்ளே செல்ல வந்தது தடை.

**ஆடம்பரம்**

உலகம் உடையின் உயர்வைக் கண்டு மதிக்கின்றது. உள்ளத்தின் உயர்வை உன்னுவதில்லை.

சிவபெருமான் தோலாடை யுடுப்பவர்.
திருமால் பட்டாடை யுடுப்பவர்.

பாற்கடல் என்ன செய்தது தெரியுமா? அதுகூட ஆடம்பரத்தை விரும்புகின்றது. தோலாடையுடுக்கும் சிவனுருக்கு ஆலாலவிடத்தை அளித்தது.

பட்டாடை யுடுக்கும் பரந்தாமனுக்குத் தனது மகள் இலக்குமி தேவியை ஈந்தது.

ஆதலால் சிறந்த ஆடையில்லாதவர்கள் ஒரு பெரிய சபைக்குச் சென்றால், அவர்கள் எத்தனை தான் கற்றிருந்தாலும் அவர்களை அந்த அவையோர்கள் நன்கு மதிப்பதில்லை இந்தக் கருத்தை நையாண்டிப் புலவர் நவில்கின்றார்;

> மேலாடை இன்றிச் சபை புகுந்தால் இந்த மேதினியோர்
> நூலாயிரம் படித்தாலும் எண்ணார்; நுவல் பாற்கடலோ
> மாலா னவரணி பொன்னுடை கண்டு மகளைத் தந்தே
> ஆலாலம் ஈந்தது தோலாடை சுற்றும் அரன் தனக்கே.

"ஆடையுடையான் அவைக் கஞ்சான்" என்ற பழமொழியும் இது குறித்து எழுந்தது.

ஒருவன் திருமணவீடு, கோயில், அரசாங்க சபை, புகை வண்டி முதலிய இடங்கள் எங்கு சென்றாலும் நல்ல பகட்டான ஆடையிருந்தால் முதலிடம் பெறுகின்றான். இன்றேல் ஒதுக்கிடம் பெறுகின்றான்.

இது குறித்து இராமலிங்க அடிகளார் இரு பாடல்கள் பாடியுள்ளார்.

அழுக்குத் துணி யுடுத்திருந்தால் நேரில் பார்த்தும் பாராதவர்களைப்போல் உலகோர் இருப்பர்; ஒரு வித உதவியும் புரியார். அந்தோ! பட்டு உடுத்திருந்தால் 'ஓ!வாருங்கள், ஏன் அங்கேயே நிற்கின்றீர்கள்? சும்மா உள்ளே வாருங்கள் வாருங்கள்' என்று கூறி உபசரிப்பார்கள்.

சரிகைக் கரையிட்ட உயர்ந்த ஆடையையுடுத்திருந்தால், பார்த்தவுடன், 'ஐயா! வணக்கம். தங்கள் பெயர் யாது? ஊர் எது? தங்களது வியாபாரம்என்ன? தங்கள் தாயார் யார்? தந்தையார் யார்? தங்கள் குலம் என்ன? சிறிது சொல்லலாமா? நான் அறிந்து கொள்ள திருவாய் மலரலாமா?' என்றெல்லாம் சரமாரியாக, அடுக்கடுக்காகக் கேட்பார்கள். இத்தகைய ஈனர்களிடம் செல்லக்கூடாது.

நேரா அழுக்குத் துணியாகில் உன்றனை நேரில் கண்டும்
பாரா தவரென நிற்பார்; உடுத்தது பட்டெனிலோ
வாரா திருப்பதென் வாரும் என்பார் இந்த வஞ்சகர்பால்
சேராது நன்னெஞ்சமே ஒற்றியூரானைச் சேர் விரைந்தே.

காயார் சரிகைக் கலிங்கம் உண்டேல் இக்கலிங்கங் கண்டால்
நீயார்? நின் பேர் எது? நின் ஊர்எது? நின்நிலை எது? நின்
தாயார், நின் தந்தை எவர்? குலம் எது என்பார் சாற்றும் அவ்வல்
வாயாரிடஞ் செலல் நெஞ்சே விடைதர வில்லையன்றே.

இந்த வண்ணம் உலகம் ஆடைக்கு அதிக மதிப்புத் தருகின்றது. ஆடை அணிகலன்கள முதலிய ஆடம்பரம் இன்றிய ஔவையாரைப் பாண்டியமன்னனது திருமணப் பந்தரின் வாயிலிலே பிடித்துத் தள்ளியதில் வியப்பு ஒன்றுமில்லையே! ஔவையார மக்களின் மிகுதியில் அதிகமான அலைப்புண்டு, உள்ளே செல்ல முடியாமல் வாளாகத் திரும்பினார்.

பாவம்! மதுரையை விட்டே புறப்பட்டுவிட்டார் ஔவையார். திருமண விழாவில் கலந்து மகிழவேண்டும், நல்லுணவு உண்டு பாண்டியனிடம் பரிசு பெற வேண்டுமென்று சில புலவர்கள் வருகின்றார்கள்.

எதிரிலே வருகின்ற தமிழ் மூதாட்டியாகிய ஔவையாரைக் கண்டு, 'தமிழ்த் தாயே! பாண்டிய வேந்தருடைய திருமணம் வெகு சிறப்பாக நடக்கின்றதாமே? உயர்ந்த உணவுகள் படைக்கின்றார்களாமே? தாங்கள் இனிது உண்டீர்களா?' என்று வினவினார்கள்.

அப்போது ஔவையார் அந்தப் புலவர்களைப் பார்த்து. 'ஐயன்மீர்! உண்டேன், உண்டேன், உண்டேன்' என்று மூன்று முறை நீளமாகக் கூறினார்.

'என்ன அம்மா! மிக்க நீளமாக உண்டேன், உண்டேன், உண்டேன் என்று மும்முறை மொழிந்தீரே; உணவு நிரம்பப் பலமோ? நீரும் நிரம்ப உண்டீரோ?' என்றார்கள் புலவர்கள்.

ஐயன்மீர்! தெளிந்த தமிழிலே வல்ல பாண்டிய மன்னருடைய மகத்தான திருமணத்திலே நான் உண்ட உயர்வை உரைக்கவேண்டுமா?

'நெருக்குண்டேன் தள்ளுண்டேன் பசியால்
சுருக்குண்டேன் ஆனல் சோறுமட்டும் உண்டிலேன்'

என்ருர் அம்மையார்.

இப்பொருள்கள் அடங்கிய அருமைப் பாட்டு இதோ உள்ளது.

வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்
துண்ட பெருக்கம் உரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் தள்ளுண்டேன் நீள்பசியி னுலே
சுருக்குண்டேன் சோறுண்டிலேன்.



## 15. மனைவியின் பரிவு

(உலகில் ஒருவருக்குச் சிறந்த துணை மனைவியே. இம்மைக்கும் மறுமைக்கும் இனிய துணையாக நின்று, மனைவி உதவுகின்ருள். கணவனிடம் மனைவி எப்படி எப்படிப் பரிவு கொள்ளுகின்ருள் என்பதை தமிழ்ப் புலவர்கள் அழகாகவும் சுவையாகவும் காவியங்களிலே கூறியுள்ளனர். இரண்டு இனிய செந்தமிழ்ப் பாடல்களை எடுத்துக் காட்டி, இக்கட்டுரையில் மனைவியின் பரிவு விளக்கப்படுகிறது.)

மனைவியே ஒருவனுக்கு நெருங்கிய உறவாக விளங்குகிருள்; அன்பின் உறைவிடமாகவும் அமைகின்ருள். கணவனுடைய நலத்தில் அதிக கவனம் செலுத்துபவள் மனைவியேயாகும்.

மகாபாரதத்திலே "சிறந்த துணைவன் யார்?" என்று ஒரு கேள்வி. அதற்குத் தருமர் 'சிறந்த துணை மனைவியே' என்று விடை பகர்ந்தார். இம்மைக்கும் மறுமைக்கும் இனிய துணையாக நின்று மனைவி உதவுகின்ருள்; மணவாளனிடம் மனைவி எப்படி எப்படிப் பரிவு கொள்ளுகின்ருள் என்பதைப்பற்றிப் புலவர்கள் புகல்வதை இங்கு சிந்திப்போம்.

தமிழ்ப் புலவர்கள் ஒரு கருத்தை அழகாகவும் சுவையாகவும் கூறுவதில் வல்லவர்கள்

அன்னை ஜானகி

ஸ்ரீராமர் விஸ்வாமித்திர முனிவருடனும் இலக்குவனுடனும் மிதிலாபுரியில் அரசவீதியில் சென்று கொண்டிருந்தார். கன்னிமாடத்தின் மீது நின்றிருந்த அன்னை ஜானகி மரகதமேனியனாகிய மன்னன் மகனை உள்ளம் உவந்து பார்க்கின்றாள். அவள் உணர்வு அழிந்தது; மெய் சிலிர்த்தது; அகங் குழைந்து அன்பு வெள்ளம் கரைபுரண்டோடியது; இமைகொட்டாது நின்று பார்க்கின்றாள்.

நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்ற நாற் குணங்களும் அவள் உடன் பிறந்தவை; உடன் வளர்ந்தவை; இப்போது அவைகள் யாவும் இருந்த இடம் தெரியாமல் பறந்து போய்விட்டன.

சிந்தித்தாள்

சீதை சிந்திக்கின்றாள். "ஆ! என்ன ஆச்சரியம்! என்னுடன் பிறந்த நாணம் முதலிய குணங்கள் இப் போது என்னிடம் இல்லாதொழிந்தன. இதோ இத் தெருவில் சென்ற இவர்தான் கவர்ந்திருக்க வேண்டும்! ஆகவே இவர் என் கண்வழி நுழைந்த கள்வர் போலும்! அந்தோ! இவர் விண் வழி செல்லும் வீறுடையவர். அன்றியும் இவருக்கு யானை குதிரை தேர் முதலிய வாகனங்கள் இல்லையா? ஆ! ஆ! இந்தத் தாமரை மலர்போன்ற பாதம் நோவ வெறுந் தரையில் நடக்கின்றாரே, அவர் அடி வருந்தாதா? இதைக்கண்டு என் மனம் வருந்துகின்றதே" என்று எண்ணிவருந்தினாள். கணவன் பாதம் வருந்துமென்று வருந்துகின்ற மனைவியின் பரிவு சிந்தனைக்குரியது.

பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வு நான் எங்குங் காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்.

## பள்ளிகொண்ட பெருமாள்

திருமால் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கின்றார். மழை பனி காற்று வெயில் இத்தனையும் அவருக்குச் சொந்தம். வேறு நல்ல படுக்கை வீடு கிடைக்கவில்லையா? ஏன் இப்படி மழையையும் வெயிலையும் தாங்கிக்கொண்டு பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கின்றார்? என்று வினா எழுகின்றது.

இந்த வினாவுக்கு விடைசொல்லக் கருதுகின்றார் மகா வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை. அவர் மிகப் பெரிய தமிழ்ப் புலவர்; கற்பனை நிறைந்த கவி பாடுகின்ற தமிழ்க் காளிதாசர்.

"நாராயணன் பாற்கடலில் பள்ளி கொண்ட காரணத்தை நான் கூறுகின்றேன்" என்பார்போல் அவர் கூறுகின்றார்.

## கண்ணபிரான்

கண்ணபிரான் இளமையில் யசோதை வீட்டில் வளர்ந்தார்; முற்பிறப்பில் மாதவம் புரிந்த கோபிகைகளுக்கு அருள்புரியும்பொருட்டுப் பகவான் அவர்கள் வீட்டில் சென்று அவர்கள் அறியா வண்ணம் பால் தயிர் இவைகளைத் திருடி உண்பாராயினர்.

நாள்தோறும் பால் காணுமல் போவதைக்கண்ட கோபிகைகள் மிகவும் வருந்தினுர்கள். இது பூனையின் வேலையா? பெருச்சாளியின் செயலா? என்று ஐயுற்ருர்கள். ஒரு நாள் கண்ணன் உண்பதைக் கண்டு விட்டார்கள். யசோதையிடம் ஓடி "அம்மா! அன்ருடம் எங்கள் வீட்டில் பால் தயிர் களவு போகின்றன; யார் திருடுகின்றனரோ என்று சந்தேகித்தோம்; இன்றுதான் உண்மை விளங்கியது. உன் அருமந்த புத்திரன் கிருஷ்ணன்தானம்மா தினமும் திருடுகின்ருன். எங்கள் வீட்டில் நாங்கள் கணவனுரிடம் வசவு வாங்குகின்ருேம். இந்த அநியாயம் உண்டா?" என்று கூறி முறையிட்டார்கள்.

யசோதை மிகவுஞ் சினந்தாள். "கண்ணு! இது என்ன வேலை? களவைக் கனவிலுங் கருதலாமா? உனக்கு நம் வீட்டில் என்ன குறை? நீ ஏன் பிறர் வீட்டில் சென்று திருடி திருடன் என்று பேர் வாங்குகின்ருய்? இனி அப்படிச் செய்யாதே" என்ருள்.

முழுப் பொய்

கண்ணபிரான், "அம்மா! இவர்கள் பேசுவது முழுப் பொய்; நானே சிறுபிள்ளை. என் வயிறு என்ன ஏரியா? மடுவா? இத்தனை பேர் வீட்டிலும் நான் ஒருவன் சென்று திருடியுண்பேனு? என் வயிறு கொள்ளுமா? இவர்கள் கணவனை வஞ்சித்துப் பாலையும் மோரையும் குடித்துவிட்டு என்மீது பழி சுமத்துகின்ருர்கள்" என்ருர்.

பிடித்து வருக

யசோதை என்செய்வாள்; "கோபிகைகளே! என் மகன் சொல்வதிலும் நியாயம் இருக்கின்றது. நீங்கள் கைப்பிடியாக அவனைப் பிடித்து வாருங்கள். நான் தண்டிப்பேன்" என்றாள்.

"அப்படியே பிடித்து வருகின்றோம்" என்று கூறி அவர்கள் அகன்றார்கள்; "இந்த மாயக் கிருஷ்ணன் தான் திருடியுண்டுவிட்டுத் தன் தாயிடம் நம்மைத் திருடிகள் என்று சமர்த்தாகக் கூறுகின்றான். இவன் வரட்டும்; சரியான பாடம் கற்பிக்கவேண்டும்" என்று நினைந்தார்கள். அவரவர்கள் வீட்டில் கதவுக்குப் பின்னால் ஒளிந்திருந்தார்கள்.

வழக்கம்போல் கண்ணபிரான் அவர்கள் மனை தோறும் போய் காய்ந்த பாலை எடுத்துப் பானையுடன் பருகினார். அவ்வாய்ச்சியர் ஓடிவந்து பிடித்து "திருட்டுக் கிருஷ்ணா! அகப்பட்டுக்கொண்டனையா" என்று கூறி மத்தெடுத்து முதுகில் அடித்தார்கள்.

இவ்வாறு கண்ணன் மத்தடிபடுவது மனைவிக்குத் தானே மனவருத்தம் உண்டாகும்? இலக்குமிதேவி மிகவும் உள்ளம் உலைந்தாள்.

"பெருமானே! இப்படி வாருங்கள். உங்களுக்கு என்ன தலையெழுத்து? ஏன் இப்படி, அரைப்படி பாலும், முக்கால் படி பாலும் திருடி மத்தடிபடுகின்றீர். நான் பிறந்த இடம் பாற்கடல்; என் தாயார் வீட்டிலேயே படுத்துக்கொள்ளுங்கள். பாற்கடலா

கிய என் தாய் மனையில் படுத்து சுகமாகத் துயிலுங்கள். கண்விழிக்கின்ற போதெல்லாம் படுத்தபடியே பாலை மொண்டு மனமார, வயிருரக் குடியுங்கள்" என்று கூறித் தன் கணவனைப் பரிவுடன் பாற்கடலில் குடியாக்கினுள்.

இந்த இனிய கருத்தை நமது மகாவித்வான் அகிலாண்டேச்வரியம்மை பிள்ளைத் தமிழில் கூறுகின்ருர்.

முத்தநகை விதுமுகப் பொதுவியர் கடப்பான்
 முழுக்கவன் தாழ்வலித்து
மூடுங் கவாடங் திறந்து மனைபுக்குண
 முனிந்தவர் பிடித்தடிக்கும்
மத்தடி பொறுத்துவரு துணைமுகிலை யுண்டுகண்
 வளர்ந்துறைதி என்று தன்னை
வயிறுளைந் தீன்றவொரு பாற்கடல் குடியாக்கும்
 மடமானை யஞ்சலிப்பாம்!



# 16. எல்லா உலகும் பெறும்

[அன்பின் மிகுதியால் அளிக்கும் உப்பில்லாக் கஞ்சி, அமிர்தமாய் தித்திக்கும். வேடர்குல நரைமூதாட்டி சபரி தந்த எச்சிற் கனி இராமபிரானுக்கு அமிர்தம்போல் இனித்தது. அன்புடன் கண்ணப்பர் தந்த மாமிசத்துண்டு சிவபிரானுக்குப் புதிய அமுதம் போல் இனித்தது. இக் கட்டுரையில் ஒளவைப் பிராட்டியின் பாடலால் "அன்பின் அமுதம் எல்லா உலகும் பெறும்" என்ற கருத்து விளக்கப்படுகிறது,]

ஒரு பொருளுக்குப் பெருமை அப்பொருளின் உயர்வாகிய தனித்தன்மையில இல்லை. அப்பொருளைக் கொடுப்பவனுடைய அன்பின் அருமையில் உயர்வு அடங்கியுள்ளது.

நெய்யினுல் தாளிதம் புரிந்து பளபளவென்று பூனைக் கண்போல் நல்ல நிறமுள்ள உயர்ந்த உணவாக இருப்பினும், அன்பில்லாதவன் மனையில் ஒரு ஒதுக்கிடத்தில் இருந்து உண்ணும் உணவு வேம்பு போல் கசக்கும்.

"விருப்பிலார் இல்லத்து வேறிருந் துண்ணும்
வெருகுக்கண் வெங்கருணை வேம்பாம்"

என்று கூறுகின்றது நாலடியார்.

### அன்பே சிவம்

அன்பில்லாமல் தருகின்ற பொருள் எத்துணை உயர்ந்ததாயினும் அது உயர்வு பெருது. அன்புடன் தந்த உப்பில்லாத கஞ்சி அன்பின் மிகுதியால் அமிர்தமாகத் தித்திக்கும்.

சபரி என்ற வேடர்குல நரை மூதாட்டி தந்த எச்சிற்கனி இராமருக்கு அமிர்தம்போல் இருந்தது. அன்பின் சிகரமாக விளங்கிய கண்ணப்பர் தந்த எச்சில் மாமிசத்துண்டு, சிவபிரானுக்குப் புதிய அமிர்தம் போலிருந்தது.

'கிஞ்சித் பக்ஷித மாம்சசேஷ கபளம் நவ்யோபஹாராயதே'

இவைகளுக்கெல்லாம் காரணம் எது? அன்புதான்.

### ஔவையார்

ஔவையார் ஒரு சமயம் நடந்து பலவூர்களுக்குச் சென்று அறவுரை பகர்ந்து வந்தனர். அக்காலத்தில் இந்நாளில் உள்ள வாகன வசதிகள் இல்லே. அதனுல் தமிழ் அன்னையாகிய ஔவையார் காலால் நடந்தே ஆங்காங்கு சென்று அரிய பணிகள் பல புரிந்து வந்தனர்.

ஒருநாள் பகலெல்லாம் நடந்தனர். பொழுது சாய்ந்தது. கால்கள் தடுமாறின. கடும்பசி. இருள் சூழ்ந்துவிட்டது. எங்கு போவது என்று அம்மையாருக்கு விளங்கவில்லே.

**பூதன்**

தற்செயலாக எதிரில் ஒரு குடிசை இருந்தது; புல்வேளூர் என்ற ஊர்ப்புறத்தே அக்குடிசை இருந்தது; அதில் பூதன் என்ற ஒரு விவசாயி இருந்தான். நல்ல பண்புடையவன்; விருந்தினரை உபசரிப்பதில் வல்லவன். கருணையால் கனிந்த உள்ளமுடையவன். அவனுடைய வாழ்க்கைத் துணைவியான மனைவியும் அவ்வண்ணமே அறப்பண்புடையவள்; கணவனார் கருத்தறிந்து நடப்பவள்.

ஔவையார் அந்தக் குடிசையின் அருகே களைத்து நின்று 'முருகா' என்று ஒரு பெருமூச்சு விட்டனர்.

குடிசைக்குள் இருந்த பூதன் என்பான் முருகா! என்ற குரலைக் கேட்டு விளக்கை யேந்திக்கொண்டு வெளியே வந்து பார்த்தான். பழுத்த பழமாக ஒரு கிழவி இருப்பதைக் கண்டான். ஔவையாரென அவன் அறிந்தானில்லை. "பாட்டி! தாங்கள் பசித்திருக்கிருப்போல் தோன்றுகிறது; உள்ளே வந்து எம்மிடம் உள்ளதை உண்டு பசியாறுங்கள்" என்று அன்புடன் அழைத்தான்.

**அன்னமிடல்**

ஔவையார் குடிசைக்குள் நுழைந்தார். கிழிந்த பாய் ஒன்றை அவருக்கு இட்டு அதில் அமருமாறு பூதனுடைய மனைவி உபசரித்தாள். கையலம்ப நீரும் தந்தாள். வாழையிலை இட்டாள். பகற்பொழுதில் சமைத்த வரகரிசி யன்னத்தைப் படைத்தாள்; அது விறகுபோல் விரைத்துப்போயிருந்தது.

"தாயே! நாங்கள் பரம ஏழைகள்; எங்கள் வீட்டில் பாலோ, தேனோ, பழமோ, உயர்ந்த பிற உணவோ இல்லை. இந்த வரகரிசிச் சோறுதான் இருக்கின்றது. இதனை உண்டு பழகியிருக்கமாட்டீர்" என்று அந்த வீட்டரசி இனிமையாகக் கூறினாள்.

ஔவையார் "குழந்தாய்! வீடு தீப்பிடித்து எரியுமானால் பன்னீர் விட்டுத்தான் அணைக்கவேண்டுமா? தண்ணீர் விட்டால் தீ அணையாதா? அதுபோல் வயிற்றில் எழுகின்ற பசித்தீ, பாதம் அல்வாவினால் தான் அணையுமா? பழங் கஞ்சி உண்டாலும் அணையுந்தானே. ஆகவே, ஏதாவது தாருங்கள்" என்றார்.

துணைக்கறி

இலையில் படைத்த வரகரிசிச் சோற்றில், மூன்று நாட்களுக்குமுன் கடைந்து நுரையுடன் புளித்து இருக்கின்ற மோரை விடுத்தாள்.

துணைக்கறி யாதொன்றும் இல்லை. வீட்டம்மை என் செய்வோம் என்று கருதினாள். தோட்டத்தில் நீளமான கத்தரிக்காய்கள் செடியில் காய்த்திருந்தன. நீளமான கத்தரிக்காய்க்கு வழுதுணங்காய் என்று பேர். இரண்டு வழுதுணங்காய்களைப் பறித்து அடுப்பில் நன்கு கனிந்துள்ள நெருப்பில் இட்டு வாட்டினாள். வாட்டியவற்றை ஒரு பாத்திரத்தில் இட்டு தூய மெல்லிய கரமலரால் பிசைந்தாள். சிறிது உப்பிட்டு அரை எலுமிச்சம் பழம் பிழிந்து, ஈர வெங்காயத்தைச் சிறிது நறுக்கிவிட்டாள். பச்சை மிள

காய் ஒன்று நசுக்கியிட்டாள். சிறிது காயத்தையும் கரைத்தாள்; கரண்டியில் சிறிது நல்லெண்ணெயிட்டு கடுகும் கருவேப்பிலையும் உளுத்தம்பருப்பும் இட்டுத் தாளிதஞ் செய்து அதில் கலந்து பச்சைச் கொத்து மல்லித தழையையும் அதில் இட்டு விரவினுள்.

மாதவம் செய்தோம்

இப்படிச் சில விஞடிக்குள் தயாரித்த அக் கறியை ஒளவையார் இலையில் சூடாகப் படைத்தாள். பூதன் அருகில் நின்று கிழிந்த பனை ஓலை விசிறியால் விசிறினுன். "எங்கள் புண்ணியப் பயனுல் வந்த தண்ணருள் நிறைந்த தாயே! தங்கள் வரவினுல் நாங்கள் புனிதர்களாக ஆனேம். நாங்கள் பெருந் தவமுடையோம். தங்கள் வரவு நல்வரவு. தாங்கள் உண்டது கோடிபேர் உண்டதாகும். தங்களைக் கண்ட கண்கள் நல்ல கண்கள்; எங்கள் குடிசை என்ன மாதவஞ் செய்ததோ" என்ருன்.

பூதன் மனைவி, "பாட்டி! இந்த புல்லிய உணவைத் தங்களுக்குப் படைத்ததற்கு உள்ளம் நாணுகிறது. தங்களைப் பார்த்தால் மிகப் பெரிய தகுதியுடையவர் என்று தெரிகிறது. தங்கள் திருமுகத்தில் ஞான ஒளி வீசுகின்றது. தங்களுக்குப் பாலும் தேனும் பழமும் சீனியும் படைக்கவேணும். நாங்கள் வறியவர்கள். எங்கள் வீட்டில் இவைகள் தான் இருந்தன. சோறும் வரகரிசி; மோரும் புளித்தது. உயர்ந்த கறிகளும் இல்லை. என்னமோ நீங்கள் இவற்றை ஏற்றுக் கொண்டு உண்பதுவே நாங்கள் செய்த மாதவம்" என்ருள்.

பாட்டிக்கு உபசரிப்பு

இப்படிக் கணவனும் மனைவியும் இன்னுரை கூறிப் படைத்த அந்த உணவை அன்பாகவும் அமிர்தமாகவும் ஔவையார் உண்டார். உண்டபின் கை அலம்பி, பாயில் அமர்ந்து இந்த உணவு எல்லா உலகும் பெறும் என்று ஓர் அருமையான வெண்பாவைப் பாடினார்கள். பாட்டைக் கேட்ட பின்னர் அவரை ஔவையார் என உணர்ந்து மேலும் பய பக்தியுடன் உபசரித்தார்கள்.

அந்த வெண்பாவை இதோ பாருங்கள்:

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரென வேபுளித்த மோரும்—திரமுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந் திட்டசோ
றெல்லா உலகும் பெறும்.

ஔவையார், இப்படி அன்புடன் அளித்த அந்த சிறுமையான உணவைப் பெருமையாக மதித்துப் பாடினார்கள். அந்த உணவு எல்லா உலகும் பெறும் என்றும் கூறினார்கள்; ஆனால் உண்மையில் இந்தப் பாடல் எல்லா உலகும் பெறும்.

———

# 17. அரைக் கண்ணன்

[வீட்டையும் நாட்டையும் அழகுறச் செய்பவர் புலவர்; புலவரால் நாடு பொலிவுறும். விளக்கொளி வீசுவதுபோல், புலவர் ஞான வொளியைப் பரப்புவர். அத் தெய்வப் புலவர் விருந்தமுதாக இருந்து பவப் பசியை மாற்றி, சிவத்துவத்தை வழங்குகின்றனர். சிவபெருமானை "அரைக் கண்ணன்" என விவரிக்கும் ஓர் அருளமுதப் பாடலை இக் கட்டுரை விளக்குகின்றது.]

ஒரு வீடு எத்துணை உயர்ந்திருப்பினும், அகன்றிருப்பினும், ஆசனாதிகள் அமைந்திருப்பினும் அழகு பெறமாட்டாது. அந்த வீட்டில் விளக்குகள் இல்லையானால் இருள் பரவி யிருக்கும். பகலாக இருப்பினும் மூதேவி நடமாடும். ஒரு திருவிளக்கு எரியுமேல் அந்த வீடு மங்கலமாகத் திகழும். எனவே வீட்டை அழகுறச் செய்வது விளக்கு.

## நாடும் புலவரும்

அதுபோல் நாட்டை அழகுறச் செய்பவர் புலவர். புலவரால் நாடு பொலிவுறும். விளக்கு இருளை நீக்குவதுபோல், புலவர் அறியாமையாகிய இருளை அகற்றுவர்; விளக்கு ஒளி வீசுவதுபோல் புலவர் ஞானவொளியைப் பரப்புவர்.

அவ்வாறு நமது தமிழகத்தில் அஞ்ஞான இருளை நீக்கி ஞானவொளியைத் தந்த புலவர்கள் பலர் அவ்வப்போது தோன்றி நாட்டை அலங்கரித்தார்கள்.

### விருந்தமுதம்

திருவள்ளுவர், சேக்கிழார் பெருமான், ஒட்டக் கூத்தர், கம்பநாடர், புகழேந்தி, காளமேகம், இரட்டைப் புலவர், வில்லிபுத்தூரர், சிவப்ரகாசர், குமர குருபரர் முதலிய பலப்பல அறிவுச் சுடர்கள் தோன்றினர். அவர்கள் பாடிய பாடல்கள் இன்றும் குன்றாமல் நின்று நிலவுகின்றன. அவைகள் வானோர் விருந்தமுதாக இருந்து பவப் பசியை மாற்றி சிவத்துவத்தை வழங்குகின்றன.

அன்றியும் சிந்தனையைத் தூண்டிவிடுவதாகவும், சில பாடல்கள் உன்னுந்தோறும் உன்னுந்தோறும் உவட்டாத உவகையை ஊட்டுவதாகவும் அமைந்துள்ளன.

### முக்கண்ணன்

ஒரு விஷயத்தை இங்கு சிந்திப்போம். சிவபெருமானுக்கு மூன்று கண்கள். அப்படியே அம்பிகைக்கும் மூன்று கண்கள்; திரியம்பகி என்று பேர்.

"அமலை யாரியை அந்தரி சுந்தரி
இமய மாமயில் அம்பைத்ரி யம்பகி"

என்பது திருவகுப்பு.

விநாயகருக்கும் மூன்று கண்கள். "த்ரியம்பக விநாயகன்" என்று கூறுகின்றார் அருணகிரிநாதர் மயில் விருத்தத்திலே. முருகருக்கும் மூனறு கண்கள். எனவே அந்தக் குடும்பத்திலே அம்மா, அப்பா, குமாரர்கள் எல்லோருக்குமே மூன்று கண்கள்.

"த்ரிலோசனாய நம" என்று ஒரு மந்த்ரமும் உண்டு.

த்ரியம்பகம் என்பது ஒரு தலம். அது கோதாவரி நதி உற்பத்தியாகும் இடத்திலே உள்ளது. பன்னிரு ஜோதி லிங்கத்திலே ஒன்று.

இனி வேதத்திலேயும் சிவபெருமானைப் பற்றி திரிலோசனம் என்று பல இடங்களில் வருகின்றது.

"த்ரயீவேத்யம் ஹ்ருத்யம் த்ரிபுரஹரமாத்யம் த்ரிநயனம்" என்று சிவானந்தலகரி பேசுகின்றது.

இப்படி யெல்லாம் சிவபெருமானை முக்கண்ணன் என்று கூறுவது மலையிலக்கு.

ஒன்றரைக் கண்ணன்

இங்ஙனமிருக்க அப்பர் சுவாமிகள் சிவபெருமானைப் பாட வந்தார்.

சிவபெருமானை முக்கண்ணர் என்று கூறுகின்றனர். ஆனால் அவரை ஒன்றரைக் கண்ணர் என்று கூறவேண்டும். ஏனென்றால் சிவமூர்த்தி உமாதேவிக்கு இடப்பாகம் ஈந்தனர். ஒரு பாதி உமை. ஒரு பாதி சிவம். அந்த முறையில் ஒன்றரைக் கண்

உமா தேவிக்குரியது போக சிவனுக்குரியது ஒன்றரைக் கண்தான். ஆதலால் சிவபெருமான ஒன்றரைக் கண்ணர் என்கிறார்.

இன்றரைக் கண்ணுடையார் எங்குமில்லை இமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட் பாவைக்குக் கூறிட்ட நாள்
ஒன்றரைக் கண்ணுங் கொடுத்துமை யாளையும் பாகம்வைத்த
ஒன்றரைக் கண்ணன் கண்டீர் ஒற்றியூருறை உத்தமனே!

இது திருநாவுக்கரசு நாயனுர் தேவாரம்.

இப்போதும் உலக வழக்கிலே சில மாறு கண்ணரைக் கண்டு அவன் ஒன்றரைக் கண்ணன் என்று கூறிப் பரிகசிப்பர். இதுபோல் நகைச்சுவை தோன்ற அப்பரடிகள் அரனுரை நோக்கி "இவர் முக்கண்ணர் அன்று; ஒன்றரைக் கண்ணர்" என்று நயமாகக் காரணங் காட்டிக் கூறுகிறார்.

இப்படி உலகப் பெரு வழக்காகவுள்ள முக்கட் பெருமானை ஒன்றரைக் கண் உத்தமன் என்று கூறுவதானல் அது எத்துணை புரட்சியும் வியப்புமாகும்.

அரைக்கண்ணர்

இனி இதனை மற்ருெரு புலவர் மறுபடியும் ஒரு புரட்சி செய்கின்ருர்.

சிவபெருமானை முக்கண்ணர், முக்கண்ணர் என்று முன்னேர்கள் மொழிகின்றனர். அது ஒரு காலத்துக்குப் பொருந்தியது தான். இப்போது அது

பொருந்ாது. ஆகவே சிவபெருமானை இனி யாரும் முக்கண்ணர் என்று மொழியவேண்டாம். அவர் அரைக்கண்ணர்; உண்மை அதுதான். ஏன் என்பீர்களாயின் கூறுகின்றேன். கவனமாகக் கேண்மின்.

இப்பெருமான் மாதொரு கூறன்; அதாவதுஅர்த்த நாரி; இடப்பாகம் இமயவல்லிக்கு உரியது. அந்த முறையில் ஒன்றரைக் கண் பார்வதிக்கு உரியது. இனி வலப்பக்கமுள்ள ஒன்றரைக் கண்ணிலே கண் ணப்பன் தந்த கண் ஒன்று. ஆக இரண்டரை போக, மிகுந்து நின்றது அரைதானே! ஆகவே இவர் அரைக்கண்ணர் என்று சுவையாகக் கூறு கின்றார்.

இப்படிக் கூறிய புலவர், பலபட்டடைச் சொக்க நாதப் புலவர்.

அப் பாடல் இதோ :

முக்கண்ணன் என்றரனை முன்னோர் மொழிந்திடுவர்
அக்கண்ணற் குள்ள தரைக்கண்ணே—மிக்க
உமையாள்கண் ஒன்றரை; மற் றூன்வேடன் கண்ணொன்
றமையுமித னாலென் றறி.

———

## 18. அர்த்தராத்திரியிற் குடை

[ஒட்டக்கூத்தர் புலவர்களுக்கு வேந்தர்; நிறைந்த அறிவு நலம் பெற்றவர். அநபாயச் சோழனின் அரசாங்கப் புலவராய் இருந்தவர். வெண்கொற்றக் குடை விரித்து, ஓரிரவு அந பாயன் பவனி வந்தான். இதைப் பார்த்த ஒரு பெண், கிண்டல் செய்தாள். "அதமனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்" என்றனள். இதைக் கேட்டான் அரசன்; மனம் நொந்தான்; வெந்தான். கூத் தரை நோக்கி 'விளக்குக' என்ருன். "அருந்ததி கற்புக்கரசி; அண்டமீது உலவுகின்ருள். வேந்தே! அவள் உமது அழகைக் கண்டால், கற்பு ஊறுபடும். மாதரார் கற்பை வளர்க்கவே பவனியில் குடைபிடித்தீர்" என்று விளக்கிஞர் கூத்தர் பெருமான். நடையழகும், பொருளாழ மும் மிக்க இனிய செந்தமிழ்ப் பாடல் ஒன்றை எடுத்துக் காட்டுகிறது இக் கட்டுரை.]

உறையூர் என்ற நகரம் முற்காலத்தில் சோழ மன்னர்களின் இராஜதானியாக இருந்தது. காவிரிக் கரையில் அந்நகரம், பொன் நகரம் போல் பொலிந்து நாவிரிந்த கீர்த்தி யுடையதாய்த் திகழ்ந்தது. இம்மாட்

சிமை தங்கிய நகரைச் சோழ மன்னர்கள் பரம்பரை யாக ஆட்சி புரிந்தார்கள்.

### அநபாயன்

இத்தகைய சோழர் குலத்திலே கி. பி. 1133 முதல் 1150 வரை அரசு புரிந்து வந்தவர் மிகப் பெரும் புகழ் பெற்ற அநபாய சக்கரவர்த்தி.

இவர் மிகுந்த சிவபக்தி யுடையவர். பெருங் கருணை படைத்தவர். இவரை இரண்டாங் குலோத் துங்கன் என்றுங் கூறுவர். பகைவரால் வரும் அபா யங்களை அழித்தபடியால் அநபாயன் என்று பெயர் பெற்றனர். எப்போதும் நல்ல தமிழ்ப் புலவருடன் சல்லாபம் புரிவார்; அருங்கலை விநோதர். இவரிடம் முதல் மந்திரியாக இருந்தவர் சேக்கிழார். அருட் பெரும் புலவராகிய சேக்கிழாரைக் கொண்டு பெரிய புராணத்தைப் பாடுவித்தார்; சூரியனுடைய ஒளி போல் அவருடைய புகழ் எங்கும் நிலவியது. இவரை எல்லோரும் வாழ்த்தினார்கள்.

### கூத்தர்

மாபெரும் கீர்த்தியுடைய இந்த அநபாய வேந்தர் பெருமானிடம் அரசாங்கப் புலவராக விளங்கி அலங் கரித்தார் ஒட்டக்கூத்தர். ஒட்டக்கூத்தருக்கு அவர் காலத்திலேயே சிறந்த புகழ் இருந்தது. "கவிச் சக்கர வர்த்தி" "கவிதா சார்வ பௌமர்" "கவிராக்ஷசர்" என்ற பட்டங்கள் இருந்தன. இவர் அநபாயருடைய பிதா விக்ரம சோழனிடம் ஆஸ்தானப் புலவராக

இருந்தார். அப்போது அநபாய மன்னர் இவரிடம் கல்வி பயின்ருர். அநபாயருடைய புதல்வர் இரண்டாவது இராசராசரும் கூத்தரிடம் கல்வி பயின்றனர்; ஆகவே ஒட்டக்கூத்தர், மூன்று மன்னர்களிடம் (பாட்டன், தந்தை, பேரன்) இருந்து அரச சபையை அணி செய்தார்.

அக் காலத்தில் உள்நாட்டுக் கலகங்கள் இல்லை. சேர சோழ பாண்டியர்கள் ஒற்றுமையாக இருந்தார்கள். அதனல் தமிழகத்தில் அமைதி நிலவியது. எங்கும் தமிழன்னை மகிழ்ச்சியுடன் களிநடம் புரிந்தனள். மனிதர்கள் மனிதர்களாகவே வாழ்ந்தார்கள். அன்பு தழைத்தது. இன்பம் கொழித்தது.

சோழ வேந்தர்கள் பலப்பல ஆலயத் திருப்பணிகள் புரிந்தார்கள். தஞ்சைப் பெரிய கோயிலைப் புதுக்கியவர் முதலாவது இராஜராஜன்; இவருடைய பேரனுடைய கொள்ளுப் பேரன்தான் அநபாய மன்னர் பெருமான்.

### திருவீதி உலா

அநபாய வேந்தர் பிறந்தநாள் கொண்டாட்டத்தை வெகு சிறப்பாக மக்கள் கொண்டாடினுர்கள்.

காலை தொடங்கி மாலைவரை அன்னதானம், சொர்னதானம், பூதானம், கோதானம், மாதானம் இப்படிப் பல தானங்களை மன்னர் புரிந்தார். எங்கும் ஒரே மகிழ்ச்சி மயம். இடி முழக்கம்போல் பல்லியங்கள் முழங்கின.

திருக்கோயில்களில் சிறந்த வழிபாடுகள் நடை பெற்றன. பொழுதுபோயிற்று; நட்சத்திர மண்டலம் போல் எங்கும் விளக்குகள் ஒளி செய்தன. கந்தர்வ மண்டலம்போல் இனிய கானங்கள் ஒலித்தன.

இரவு 9 மணி. மன்னர் பரிவாரங்கள் சூழத் திருவுலாப் போந்தனர். அந்த வுலாவின் பெருமை அளவுக்கு அடங்காதது. ராஜ வீதிகளில் ஆண்கள் ஒருபுறம், பெண்மணிகள் மற்ெருரு புறம் ஒழுங்காக நின்றுகொண்டிருந்தார்கள்.

இசை நுணுக்கந் தெரிந்த பெரும் புலவர்கள் வீதி நடுவில் நாதஸ்வரம் வாசித்துக்கொண்டிருந்தார்கள்; கான வெள்ளம் வீதியில் கரைபுரண்டு ஓடியது. எள் விழுந்தால் கீழே விழாத வண்ணம் மக்கள் கூடி யிருந் தார்கள். இந்த மக்கள் வெள்ளத்தில், அமைதி வெள் ளம் நிறைந்திருந்ததுதான் பெரிய அதிசயம்.

**இடையில் ஒரு பெண்மணி**

அரச வீதியில் மன்னர் உலா வந்து கொண்டிருந் தார். அப்போது இரவு பதினைந்து நாழிகை. நடுராத் திரி; பட்டப் பகல்போன்ற வெளிச்சம்.

அமைச்சர்களும் பட்டவர்த்தனர்களும் மகுட வர்த்தனர்களும் மன்னரைச் சூழ்ந்திருந்தார்கள். சூரி யன் அருகில் சந்திரன் இருப்பதுபோல் அரசருடைய அருகில் ஒட்டக்கூத்தர் இருந்தார். கண்கொள்ளாத காட்சி. மன்னர் தேவர்கோமானைப்போல் விளங் கினார்.

இரு புறங்களிலும் வெண்சாமரைகள் இரட்டி னார்கள். வெண் கொற்றக்குடை நிழற்றினார்கள்.

மன்னர்கள் மடாதிபதிகள் இவர்கட்குப் பகல்தீவட்டி யும் இரவில் குடையும் மரியாதைக்காக உண்டு.

இரவிலே குடை பிடிப்பதைக் கண்டாள் ஒரு பெண்; அவள் பெரிய குறும்புக்காரி; கூர்மையான அறிவும் படைத்தவள்.

அருகிலே நின்ற மற்றொரு பெண்ணைப் பார்த்து. "என்னடீ இப்பொழுது என்ன வெயிலா? மழையா? ஒன்றுமில்லை. இந்த நேரத்திற்குக் குடை அவசியமா? "அதமனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்" என்பது ஒரு பழமொழி. அப் பழ மொழி இப்போது நினைவுக்கு வருகின்றது" என்று சற்று கிண்டலாகச் சொன்னாள்.

**மன்னவன் மனவருத்தம்**

மன்னவருடைய செவியில் இந்த வார்த்தை விழுந்தது. சுருக்கென்று பட்டது. ஒரு கணம் அவர் மனதில் மின்சாரம் பாய்ந்தது போன்ற உணர்ச்சி யுண்டாகியது. பாதி ராத்திரியில் குடை ஏன்? என்று அப்பெண் கூறிய சொல்லுக்கு விடை பகரவேண்டும் என்றும், அந்த விடை ஆணித்தரமாகவும் பொருத்த மாகவும் இருக்க வேண்டும் என்றும் எண்ணினார். உடனே புலவர் வேந்தராகிய ஒட்டக்கூத்தரைக் கடைக்கண்ணால் பார்த்தார்.

ஒட்டக்கூத்தர் நிறைந்த அறிவு நலம் பெற்றவர். குறிப்பறிவதிலும் வல்லவர். அப்பெண் கூறிய மிடுக் கான துடுக்கான சொல்லையும், அதனால் அரசருடைய முகத்தில் ஏற்பட்ட மாறுதலையும் உணர்ந்தார்.

**கூத்தர் கூறிய விடை**

"மன்னர் பெருமானே! வணக்கம்; பெண்மணிகளின் கற்பொழுக்கத்தால் உலகிற்கு எல்லா நலன்களும்உண்டாகின்றன. அத்தகைய மாதர்களுடைய கற்பு நலத்தைக் காத்தருள்வது காவலனது கடமை. விண்ணிலே உலவுகின்றவள் அருந்ததி; அவள் கற்பினுக்கரசி; நீ பவனி வருகின்றபோது அவள் விண்ணிலே நின்று உன்னைக் கண்டால் "இத்துணை அழகனும் உளனோ?" என்று ஒருகணம் நினைப்பினும், அவள் கற்பு மாசுபடும்; அவ்வண்ணம் வானத்திலேயுள்ள அருந்ததியாகிய கற்பரசியின் பார்வை நின்மீது விழக்கூடாது. அவளுடைய கற்பையும் காத்தருளும் பொருட்டு உனக்கு இக்குடை பிடிக்கப்படுகின்றது; இது வெறும் ஆடம்பரத்துக்காகப் பிடிக்கப்படவில்லை" என்று மிகஅழகாகக் கூறினர். அவர் பெரும் புலவர் அல்லவா? இக்கருத்துக்கள் அடங்கிய ஒரு செய்யுளைக் கூறினர்.

அச் செய்யுள் இதோ,

"அண்டமீ துலவும் அருந்திறல் கற்புக்
கரசியாம் அருந்ததி நின்னைக்
கண்டதால் ஊறு படவொணு தென்று
கருதிநீ பவனியில் கவிகை
கொண்டதும் முறையே குலோத்துங்க என்னும்
கொற்றவ! நற்றவ மணியே!
மண்டலைப் புரப்போர் மாதரார் கற்பை
வளர்த்திடல் மாண்புடைத் தன்றே?

—o—

இப்பாடலைக் கேட்டார் மன்னர் பெருமான். பாட்டில் நடையழகு, பொருளாழம்,பொருட் செறிவு, தேன்போன்ற இனிமை, தெளிவான கருத்து இத்தனையும் பொருந்திய தீந்தமிழ்க் கவி கேட்டு உடலும் உள்ளமும் உணர்வுங் குளிர்ந்தார்.

"அர்த்தராத்திரியில் குடை ஏன்?" என்று துடுக்காகக் கேட்ட அப் பெண்ணைக் கடைக் கண்ணால் பார்த்தார். அவள் நாணி மன்னிப்பு கேட்பதுபோல தலை வணங்கினாள்.

அக் கேள்வியினால் இரவில் குடை பிடித்ததற்குத் தக்க ஒருசமாதானம் வெளிப்பட்டதைத் குறித்து மன்னருக்கு ஒரு திருப்தியும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன.





## 19. நாயும் நீயே!

[முற்காலத்தில் நந்திவர்மன் என்னும் மன்னன் இருந்தான்; அவன் கொடையாளி; நந்திக்கலம்பகம் இவன் மீதே பாடப்பெற் றது. இவன் மனைவி மதங்கசூளாமணி என்னும் பெயரினள்; கற்புக்கரசி. கவிபாடும் திறமுடையாள். பரத்தையின்பால் மயங்கிய தம் கணவனை யாழால் மகிழ்வித்தான் ஒருபாணன்: சூளாமணியின் நெஞ்சு சுட்டது. பாணனை நய மும் இனிமையும் கலந்த பாட்டால், 'பேயும், நரியும், நாயும் நீதான்' என்று ஏளனம் புரிந்து அவனைத்தலைகுனியச் செய்தாள். அத் தீந்தமிழ்ப் பாடலை அழகுற எடுத்துக் காட்டுகிறது இக் கட்டுரை]

அறிவுடையவர்கள் பேசும் பேச்சில் அழகு இருக்கும்; ஆழம் இருக்கும்; நுணுக்கம் இருக்கும். இத் தன்மையான ஒரு நிகழ்ச்சியை இங்கு குறிப்பிடு கிறேன்.

### நந்திக் கலம்பகம்

நந்தி என்ற ஒரு மன்னன் முற்காலத்தில் இருந் தான். இவன் சிறந்த கொடையாளி. நந்திவர்மன் என்றும் கூறுவர். இம்மன்னன்மீது ஒரு கலம்பகம் பாடப்பட்டது. அந்நூல்முழுவதும் இப்போது இல்லை. தேன் போலத் தித்திக்கின்ற சில பாடல்களே கிடைத்துள்ளன.

### அறிவுடைய மனைவி

இம்மன்னவனுடைய மனைவி சிறந்த அறிவும் பண்பும் உடையவள். கற்புக்கடன் பூண்டவள். உயர்ந்தஉள்ளமும் உணர்வும்உடையவள். இனிமையாகப் பேசுபவள். நல்ல தமிழறிவு படைத்தவள். கவி பாடுந் திறமுடையவள்.

### பரத்தை மோகம்

நந்தி மன்னன் ஒரு பரத்தையிடந் தொடர்பு கொண்டான், பரத்தையின் வீட்டுக்குச் சென்று அவளுடைய மோக வலையில் வீழ்ந்த மன்னன், இரவு முழுவதும் அங்கேயே காலங் கழித்தான்.

அது குறித்து அரசமாதேவி பெருங்கவலையுற்றாள்; கண்ணீர் வடித்தாள். உள்ளந் துடித்தாள். என் செய்வாள்? பாவம்! வெயிலில் கிடந்த புழுவைப் போலானாள்.

### பாணர்கள்

அக்காலத்தில் இசையில் வல்லவர்கள் பாணர்கள். அவர்கள் நன்கு பாடுவார்கள்; வீணை, குழல்,தண்ணுமை, சாரங்கா, யாழ் முதலிய பல வகையான இசைக் கருவிகளை இனிது வாசிப்பார்கள். ஊர் ஊராகத் தமது இசைக் கருவிகளுடன் சென்று பாடிப் பரிசில் பெறுவார்கள்.

ஆழ்வார்களில் கூடத் திருப்பாணாழ்வார் என்ற ஒருவர் இருந்தார்; அவர் இசையில் வல்லவர்.

நாயன்மார்களில் ஒருவர் திருநீலகண்டயாழ்ப்பாணர். அவரைப் பற்றியும் சிறப்பாகச் சேக்கிழார் பெருமான் கூறுகின்றார். திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரத்திருப்பதிகம் பாடும்போது அவற்றை யாழில் இசைத்து மகிழ்வார். மற்றவரையும் மகிழ்விப்பார்.

பாணருடைய மனைவியர்க்கு விறலியர் என்று பெயர். அவர்களும் நன்கு பாடுவார்கள்.

திருநீலகண்ட யாழ்ப்பாணருடைய மனைவியார் மதங்கசூளாமணியாரும் தேவாரப் பதிகத்தை இசையுடன் பாடுவார் என்று வரலாறு கூறுகின்றது.

பாணர்களைப் பற்றிய செய்திகள் சங்க நூல்களில் நிரம்ப வருகின்றன.

இந்த நந்தி என்ற மன்னன் பரத்தை வீட்டில் இருந்தபோது ஒரு பாணன் இரவு முழுவதும் அங்கு அவர்களை மகிழ்விக்கும்பொருட்டுப் பாடிக்கொண்டிருந்தான்.

### வாடிய மாதரசி

பொழுது புலர்ந்தது. ராஜமாதேவி யிருக்கின்ற அரண்மனைக்கு வந்தான். பாணன் விடியுமளவும் தன் கணவன் இருந்த பரத்தை வீட்டில் பாடிய பாடலை மாதரசி கேட்டாள்; அவள் நெஞ்சு சுட்டது. அவனை நன்றாக இறக்க வேண்டும் என்று எண்ணினாள்.

**நலம் வினவல்**

அந்த நிந்தனையில் நயமும் இனிமையும் இருக்க வேண்டும்; பெண்ணியல்பில் பிழை வரக்கூடாதல்லவா? பாணனை நோக்கி நலம் வினவினாள்.

**பேயல்ல நீயே**

''அப்பா! பாணனே! நீயே நேற்றிரவு என் தங்கை (தன் கணவன் அபிமானத்துக்கு உரியவள் என்ற முறையில் பரத்தையைத் தன் தங்கை யென்று உபசரித்தாள்) வீட்டில் பாடிக்கொண்டு இருந்தாப் போல் இருந்தது. குரல் கேட்டது" என்றாள் அம் மாதரசி.

''அம்மா! வணக்கம்; எல்லாந் தங்கள் ஆசீர்வா தம் தான். பாட்டு எப்படி யிருந்தது? இனிமையாக இருந்ததா? தாங்கள் தானே கல்வியின் அருமையை அறிந்தவர்கள்!" என்றார் பாணர்.

"அப்பா! பாணனே! உன்னுடைய பாடலைப் பற்றி நான் என்ன அதிகம் கூறவேண்டுமா? புகழ் நிறைந்த என் கணவனுருடைய அன்புக்குரிய என் தங்கை வீட்டில் நீ விடியுமளவும் பாடிய பாடலைக் கேட்டு. என் தாய் "பேய் கத்துகிறது" என்றாள். மற்றவர்கள், "நரி ஊளையிடுகின்றது" என்றார்கள். என் தோழி 'நாய் குலைக்கின்றது" என்றாள். ஆனால் அவர்கள் அப்படிக் கூறக்கேட்ட நான், "பாடியது நீ" யென்றேன்! உன்பாடலைப்பற்றி அதிகம் கூற வேண்டாமே" என்றாள் சூளாமணியார்.

**நாணிய பாணன்**

அதைக் கேட்ட பாணன் நாணமுற்றான்.

அவள் எத்தனை நாகரிகமாக அப் பாணனை ஏளனம் புரிந்தாள் என்பதைச் சிந்தியுங்கள். நிந்தனையிலும் ஓர் அழகு; மாதரசி அப்போது கூறிய பாடல் இது:

ஈட்டுபுகழ் நந்தி பாணநீ எங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடியளவும்—காட்டிலழும்
பேயென்றாள் அன்னை; பிறர்நரியென்றார்; தோழி
நாயென்றாள்! நீயென்றேன் நான்.



## 20. ''அதனையிங்கு அனுப்புவாயே''

[மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் நிறைந்த சைவப் புலமையும், தமிழ்ப்புலமையும் உடையவர். இவர் திருவாவடுதுறை குருபீடத்தை அலங்கரித்தவர்; தமிழ் விநோதர். இவருடன் உரையாடுவதைப் பெரும் பேறெனக் கருதுவர் தமிழ்ப்புலவர்கள். நீதிபதி வேதநாயகம் பிள்ளை தேசிகரைப் பார்க்கச் சென்றார்; தமிழ்க் காதலால் இருவரும் அளவளாவினர். இருவரின் தமிழன்பையும் இச்செந்தமிழ்க் கட்டுரை, அழகுறச் சிறப்பிக்கிறது.]

நற்றமிழ்வல்ல ஞானசம்பந்தருக்கு ஆயிரம் பொன் அடங்கிய உலவாக்கிழியருளிய தலம், திருவாவடுதுறை.

அத்தலத்திலே சென்ற நூற்றாண்டிலே சைவ சித்தாந்த ஞானபானுவாக விளங்கி, குருபீடத்தில் எழுந்தருளி அருட்செங்கோலைத் தாங்கி ஞான அரசாட்சி செய்தவர் மேலகரம் சுப்ரமண்ய தேசிகர் அவர்கள்.

### தமிழ் விநோதர்

அவர் எப்பொழுதும் தமிழ்ப் புலவர்கள், இசைப் புலவர்கள் முதலியவர்களுடன் அளவளாவி, தமிழ் விநோதராக இருந்தார்.

தேசிகர் தாமே பலருக்குத் தமிழ் நூல்களைப் பாடஞ் சொல்லுவார். வேறு பலபுலவர்களைக் கொண்டும் பயிற்றுவிப்பார்.

வடக்கே போஜராஜனுடைய சபையில், எப்படி காளிதாசர், பவபூதி, தண்டி, பாரவி முதலிய புலவர்கள் பலர் நிரம்பியிருப்பார்களோ, அதுபோல் தேசிகருடைய சபை இடையரு து புலவர்கள் நிரம்பிய வண்ணம் இருக்கும்; புலவர்களின் தரம் அறிந்து பரிசில் வழங்குவார்.

அக்காலத்தில் அவரிடம் பரிசில் பெருத பாவாணர்களே இலர். தமிழ்க் கடலாகவும், அள்ளி வழங்கும் தாதாவாகவும் அவர் புகழ்பெற்று இருந்தார்.

### நீதிபதி வேதநாயகர்

ஒரு நாள் மாயவரம் முன்சீப்பு வேதநாயகம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை மடத்திற்கு வந்தார். அவர் கிறிஸ்துவர். இவர் சைவ மடாதிபதி. ஆனல் தமிழ்ப்பற்று உள்ளவர்க்கு இச்சிறு தடை என்ன செய்யும்? தமிழாகிய தனி வெள்ளம் கரை புரண்டு ஓடும்போது சாதி, சமயம், மதம் முதலிய உப்பு மூட்டைகள் யாவும் கரைந்துவிடும் அல்லவா!

நீதிபதியும், ஞானநிதியும் ஒன்று கூடி, உள்ளங் கலந்து, உணர்வு கலந்து உயிர் கலந்து பகல் முழுவதும் உரையாடிக்கொண்டிருந்தார்கள்; மணி போனதே தெரியவில்லை.

தேசிகரிடம் நீதிபதி பிரியா விடைபெற்று; வண்டியில் ஏறி மாயூரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

**கடிதம் எழுதினர்**

வேகமாகச் செல்கின்ற காளைமாட்டு வண்டியில் சென்று மாயூரம் சேர்ந்தார்.

மறுநாட் காலையில் எழுந்தார். ஒரு முக்கியமான பொருள் திருவாவடுதுறை மடத்திலேயே நின்று விட்டது. அது இல்லாமல் இங்கே ஒரு வேலையும் நடக்கவில்லை. மிகவும் அல்லல்பட்டார்.

உடனே ஒரு கடிதம் எழுதினர். வசனமாகவா? இல்லை. பாடத் தெரிந்தவர் அவர்.

> சுருதியோர் உருக்கொண்டென்ன
> சுப்பிர மணிய மேலோய்!
> கருதிஇன் ஞெருகால் உன்னைக்
> காணலாம் எனும் அவாவால்
> பொருதிஎன் மனம்பின் ஈர்க்கப்
> பொறையுறும் வண்டி பூட்டும்
> எருதுகள் முன்னே ஈர்க்க
> என்பதி அடைந்திட்டேனே.

“வேதமே ஒரு வடிவு கொண்டது போன்ற சுப்ர மணிய தேசிக மாமணியே! இன்னும் ஒரு முறை உம் மைக் காணலாம் என்று என் மனம் பின்னே ஈர்க்க வும், வண்டியில் கட்டிய எருதுகள் முன்னே பிடித்து ஈர்க்கவும் இப்படி முன்னுக்கும் பின்னுக்கும் தள்ளா டிய வண்ணம் இங்கு வந்து சேர்ந்தேன்.

**மனத்தை அனுப்புக**

“ஐயனே! நேற்றிரவே என் ஊர் வந்து சேர்ந் தேன்; ஆனல் என் உள்ளம் அங்கேயே நின்றுவிட்

டது. மனம் அங்கும் உடல் இங்குமாக இருந்தால் என்ன வேலை செய்ய முடியும்? ஆதலால் என் மனத்தை இங்கு அனுப்பி வைக்குமாறு வேண்டு கின்றேன்.

சூர்வந்து வணங்கு மேன்மைச் சுப்பிர மணியத் தேவே
நேர்வந்து நின்னைக் கண்டு நேற்றிராத் திரியே மீண்டு
ஊர்வந்து சேர்ந்தேன்; என்றன்உளம்வந்துசேரக் காணேன்
ஆர்வந்து சொலினுங் கேளேன்; அதனையிங்கனுப்புவாயே.

(ஆர்-நிரம்பிய; வந்து-காற்று)

"எங்கும் நிறைந்த வாயுதேவன் கூறினாலும்" என்பது மற்றொரு பொருள்.

தேசிகருடைய உயர்வும், அவரிடம்ஈடுபட்டுள்ள வேதநாயகருடைய பண்பும் இந்த திருப்பாக்களால் புலனாகின்றன.

ஆ! ஆ! என்ன அன்பு! ஆழங் காண முடியாத அருங்கடல் போன்ற அன்பன்றோ!

———

# 21. புலவருடைய திறம்

[நாட்டின் பெருமைக்கு நல்லணி புலவர்களே. கம்பரும், வள்ளுவரும், காளிதாசரும், வால்மீகியும், ஷேக்ஸ்பியரும், மில்டனும் தோன்றி அந்தந்த நாட்டையும் மொழியையும் அலங்கரித்தார்கள். மேலும் அக் காலத்துப் புலவர்களின் தேனூறும் பாடலுக்கு மன்னரும், ஆண்டவனுங்கூட வாயூறி நிற்பர்; ஒரு செந்தமிழ்ப் பாடலின் வாயிலாய், அக் காலப் புலவரின் திறத்தை எடுத்துக் காட்டுகின்றது இக் கட்டுரை.]

ஒரு தேசத்திற்குப் புகழ் புலவர்களால் விளைகின்றது; சிறந்த புலவர்கள் இருந்து நாட்டை அலங்கரிக்கின்றார்கள்; மேலும் புலவர்கள் திறமையாகப் பாடுவதிலும், திறமையாகப் பேசுவதிலும் வல்லவர்கள். அக்காலத்துப் புலவர்கள் தேனூறும் பாடலுக்கு மன்னர்கள் வாயூறி நின்றார்கள். மன்னவர்கள் மட்டுமா? ஆண்டவன் கூட.

"பாவலான் ஒருவன் செந்தமிழ்க் கிரங்கி
பரவையார் ஊடலை மாற்ற
ஏவலா ளாகி இரவெலாம் உழன்றான்".

ஏகநாயகனாகிய எம்பெருமான் என்றால், பாவலர் பெருமை பாட்டுக்கும் ஏட்டுக்கும் அடங்குமோ?

சொக்கநாதப் புலவர் என்ற ஒருவர் மதுரையில் இருந்தார். அவர் திருமலை நாயக்கர் காலத்தவர். அவர் பல பாடல்கள் பாடியிருக்கின்றார். ஒவ்வொரு பாடலும் சுவை மிகுந்தது. சொல் நடை பொருள் நடையுடன் கூடியது.

சொக்கநாதப் புலவர் ஒரு சமயம் திருக்களந்தை என்ற திருத்தலஞ் சென்றார்.

சுவாமி திருமுன் நின்று அழகாகப் பாடினார். சிவ லிங்கத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது.

"அன்பனே! உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள்."

இந்தக் குரலைக் கேட்டவுடனே புலவர் திடுக்கிட்டுப் போனார். எம்பெருமான் திருவருளை எண்ணினார். அவர் கண்களிலிருந்து விண்மாரி என நீர் வழிந்தது; சொல் குழறியது.

**வரம் வேண்டல்**

ஆண்டவனிடம் அவர் என்ன கேட்டார்? அழிகின்ற பொன்னையும், பொருளையும், நிலபுலன்களையுமா கேட்டார்? இல்லை இல்லை.

நிரம்பிய பொன்னும், பொருளும், நிலபுலன்களும் உடையவன் மகிழ்ச்சியாகவும் திருப்தியாகவுமா இருக்கின்றான்? செல்வம் உயர உயரக் கவலைகள் உயருகின்றன. மன்னாதி மன்னரும் கவல்கின்றார்கள்; பெரிய கோடீஸ்வரர்கள் மனச்சாந்தியின்றி வருந்துகின்றார்கள்.

ஆதலால் அறிவு நிறைந்த புலவர்பெருமான் அல்லலுக்கு உறைவிடமான செல்வத்தை வேண்டினாரில்லை.

## இறை இன்பம்

அவர் வேறு என்ன வேண்டினார்? இறைவன் நமது உள்ளத்தில் வந்து இருப்பதுவே மேலான இன்பம் என்று கருதினார்.

ஒரு மாகாணத்துக் கவர்னர்—அல்லது முதன் மந்திரி நமது வீட்டில் வந்து சில நேரம் தங்கிவிட்டுச் சென்றால், அதற்கு எவ்வளவு பெருமை ஏற்படுகின்றது.

அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகனான எம் பெருமான் நமது உள்ளத்தில் எழுந்தருளினால் அதை விட மேலான ஒரு பெரும் பேறு இருக்க முடியுமா? அதுவே பேரின்பம் என்றெல்லாம் அவர் எண்ணினார்.

"சுவாமீ! கருணைக்கடலே! தேவரீர் என் உள்ளத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும்" என்றார்.

## இறைவனின் வேடிக்கை

இறைவன் புலவருடன் வேடிக்கையாகப் பேசுவதை விரும்பினார். "அன்பனே! இதோ இந்தத் திருக்களந்தைக் கோயிலிலே இருக்கின்றேன். இங்கு என்பால் பல அடியார்கள் இடையறாது வந்து வந்து வழிபட்டு வரம் பெறுகின்றார்கள்; இதனை விடுத்து

உன் உள்ளத்தில் நான் எப்படி வர இயலும். அப்படி வந்து தங்கினுல் இங்கு வருகின்ற அடியார்கட்கு ஏமாற்றமாகிவிடும். ஆகவே நீ கேட்ட வரத்தின்படி நான் உன் உள்ளத்தில் எப்போதும் தங்கியிருக்க முடியாது" என்ருர்.

### புலவர் பதில்

புலவர் இந்த வாசகத்தைக் கேட்டார். இறைவன் எங்கும் தங்கும் நிறையுடையவன். பல்வேறு வடிவும் பல்வேறு செயலும் பூண்ட பரிபூரணன். எனினும் இறைவன் 'நான் திருக்களந்தைக் கோயிலில் இருக்கின்றேன். உன் உள்ளத்தில் எவ்வாறு வந்து தங்குவேன்' என்று கூறியதனுல் நாமும் சமர்த்தாகத் தான் கூறவேண்டும் என்று கருதினுர்.

"ஆண்டவனே! நீர் இரண்டு இடங்களிலும் ஏக காலத்தில் இருக்க ஒரு வழி கண்டு பிடித்திருக்கின்றேன். அது என்ன வழி தெரியுமா? கூறுகின்றேன் கேளும்;

"நீர் முன்னம் உமது திருமேனியில் இடப் பாகத்தை என் தாய் உமாதேவிக்குத் தந்தீர். அவருடைய வலப்பாகத்தைப் பெற்றுக்கொண்டீர். அந்த வகையில் உமது திருமேனியில் இடப்பாகமும் அம்மையின் வலப்பாகமும் சேர்ந்து இப்போது இங்கே காட்சியளிக்கின்றீர்!

### இரு வடிவங்கள்

"ஐயனே! இனி உமது திருமேனியில் மற்றைப் பாதியும் அம்மையின் மேனியில் ஒரு பாதியும் உண்

டல்லவா? அந்த இரண்டும் சேர்ந்தால் ஒரு உருவம் ஆகுந்தானே? அப்போது இரண்டு வடிவங்கள் ஆகும்; ஒன்று திருக்களந்தைத் திருக்கோயிலில் இருக் கட்டும். மற்றொன்று அடியேன் மனக்கோயிலில் இருக்கட்டுமே" என்ருர்.

புலவருடைய சொல் திறத்தைக் கேட்டுப் பெருமான் பெருமகிழ்ச்சியுற்ருர். அவருடைய உள்ளக் கோயிலில் எழுந்தருளி அருட்காட்சி தந்தருளினர். அவர் பாடிய அற்புதமான பாடல் இதோ.

ஆகத்திலே யொருபாதி யென் னம்மைக் களித்தவள்தன்
பாகத்திலே யொன்று கொண்டாய்; அவள்
மற்றைப் பாதியும் உன்
தேகத்திலே பாதியும் சேர்ந்தால், இருவர்
உண்டே; சிவனே
ஏகத்திராமல் இருப்பாய் களந்தையும் என்னெஞ்சுமே.

———

## 22. கங்கணங் கட்டிக்கொண்டான்

சென்ற நூற்றுண்டு எல்லாவகையிலும் சிறப்புடன் விளங்கிற்று.

தமிழின் தனிச் சுவை கண்டு புலவர் சிகாமணியாக விளங்கினுர் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்.

பக்த சிகாமணியாக இராமலிங்க அடிகளார் விளங்கினுர்.

சைவ சிந்தாமணியாக யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் அவர்கள் விளங்கினுர்கள்.

இசையுலகில் தனிப் பெருஞ் சக்ரவர்த்தியாகத் திகழ்ந்தார் தியாகராஜ சுவாமிகள்.

கீர்த்தனையுலகில் நிகரில்லாத ஞானபானுவாகத் திகழ்ந்தார் கோபாலகிருஷ்ண பாரதியார்.

நீதி யுலகில் நிகரில்லாத சூடாமணியாக நின்றுர் மாயூரம் வேதநாயகம் பிள்ளை.

வடக்கே அதே சமயம், அம்பிகையின் அருள் பெற்ற அவதார புருஷராக வாழந்தார் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

இப்படி எல்லாவகையிலும் மிகச் சிறந்த மேதாவிகள் வாழ்ந்த அக்காலத்தில், திருவாவடுதுறை மடாலயத்திலே, சிவஞானச் செழுஞ்சுடராக விளங்

கின்ற குரு மகா சந்நிதானம் சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

அவர்கள் அவதரித்தது மேலகரம். அதனால் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் என்று கூறுவர்.

இப் பெரிய மகான் கடுந் துறவியாக சீலத்தின் சிகரத்திலே நின்று சைவத்தையும் தமிழையும் பாது காத்து வந்தார். இவர் பல மாணவர்களை எல்லா அனுகூலமும் செய்து கொடுத்து தமிழ்க்கலை பயிலு மாறு செய்தார். உயர்திரு. டாக்டர் உ. வே சாமி நாதையர் அவர்கள் முதலிய தக்கோர்களைப் படிக்க வைத்து முன்னேற்றமடையச் செய்தவர் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் என்றால் இவருடைய பெரு மைக்கு வேறு சான்று என்ன வேண்டும்?

அக்காலத்தில் ஆங்கிலேய அரசாட்சி நடந்து கொண்டிருந்தது. மக்களுக்கு ஆங்கிலத்திலே இரண்டாந்தாரமான இளம் மனைவிமேல் வைத்த மோகம்போல் அளவற்ற மோகம் இருந்தது. தமிழிலே பேசத் தெரியாது என்று கூறுவதை ஒரு பெருமை யாக நினைத்தார்கள்.

ஆங்கிலத்தில் பேசுவதையே மிகப் பெருமை யாக நினைத்த காலம். ஆங்கிலத்தை அளவுக்குமேல் மதித்ததோடு அமையாமல், தமிழ்த் தாயை அவ மதிக்கவும் செய்தார்கள்.

இவ்வாறு எங்கும் தமிழைப் புறக்கணித்த அக் காலத்தில் குரு மகா சந்நிதானம், மேலகரம் சுப்பிர

மணிய தேசிகர், நூற்றுக் கணக்கான மாணவர்கட்கு ஞானதானமாகத் தமிழமுதத்தை ஊட்டி வளர்த்தார்.

இந்த அரிய செயலைப் பலகாலும் நேரில் கண்டார் மாயூரம் வேதநாயகம் பிள்ளை. அவர் சிறந்த நீதிபதி. அவர் திருவுள்ளத்தில் அளவற்ற மகிழ்ச்சி வெள்ளம் பொங்கி வழிந்தது. அவ்வெள்ளத்தில் ஒரு பாடலும் மிதந்து வந்தது. அப்பாடல் இதோ வருகின்றது.

கட்டளைக் கலித்துறை

வானென்றுஉதவ வருஞ் சுப்ரமண்ய வரோதயனே
தானென்று வெண்ணரன் பாஷையின் நாட்டில்
தலையெடுக்க
ஏனென்று கேட்பவர் இல்லாத் தமிழை இனிதளிக்க
நானென்று கங்கணங் கட்டிக்கொண்டாய் இந்த
நானிலத்தே.

வான் என்று உதவ - மேகம்போல் கைமாறு கருதாமல் உதவி புரிபவர்.

வெண்ணரன் - வெள்ளைக்காரன்.

என்ன அழகான பாடல்?

'தமிழை ஏனென்று மக்கள் கேட்காமல் இருந்த அக்காலத்தில் தமிழை இனிது காப்பாற்ற நானென்று கங்கணங் கட்டிக்கொண்டார் தேசிகர்' என்று கவி கூறுகின்றது.

இவ்வாறு அறிவுத் தானம் செய்து வந்ததோடு, அன்னதானமும் அளவில்லாமல் புரிந்து வந்தார் தேசிகர்.

தாது வருஷத்தில் பெரும் பஞ்சம் வந்தது. மக்கள் பசி பசி என்று தவித்தார்கள். பலர் கொள்ளித் தலை எறும்புபோல் துள்ளித் துடித்தார்கள். பலர் மடிந்தார்கள். பாவம் மக்கள் பட்ட வேதனைக்கு எல்லையே கிடையாது.

அப்போது, தேசிகர் அவர்கள் மக்களுக்கு அன்னமும் சொர்ணமுந் தந்து, அவர்கள் பசிப் பிணியை மாற்றி, கவலையையாற்றி அருள்புரிந்தார். இந்தக் கருணைச் செயலைப் பாராட்டி நீதிபதி வேத நாயகம் பிள்ளை ஒரு கவி பாடினார்.

எரியொத்த பஞ்சம் இடங்கரை யொத்த திடங்கர்பற்றும்
கரியொத்தனபல் லுயிர்கள் அப்பஞ்சக் கராமடிக்க
அரியொத்தனன் சுப்பிரமணியையன் அரி சக்கரம்
சரியொத்தன அவன் ஈந்திடும் பொன் வெள்ளிச் சக்கரமே.

நெருப்பைப்போன்ற பஞ்சம் முதலையை ஒத்தது. உயிர்கள் முதலை பற்றிய கஜேந்திரனை யொத்தார்கள். பஞ்சமாகிய முதலையை மடித்த நாராயணரை யொத்தனர் சுப்பிரமணிய தேசிகர். அவர் விடுத்த சக்கராயுதத்தை யொத்தது அவர்வழங்கிய பொன் வெள்ளிப் பணங்கள்.

இத்தகைய புண்ணிய மூர்த்திகள் வாழ்ந்த காலத்தில் நாம் வாழவில்லையே என்ற ஏக்கம் உண்டாகின்றது.

---

